# கம்பன் மணி மலர்

இராட்சச 1976




## கம்பன் கழகம் – காரைக்குடி

முத்தமிழ்ப் பண்ணை
7.5.76.

64-3

# கம்பன் மணி மலர்

# 1976






இராட்சச—பங்குனி—1 முதல் 4 வரை

1976—மார்ச்—14 முதல் 17 வரை நிகழ்ந்த

**38 ஆவது கம்பன் திருநாள் வெளியீடு.**

**கம்பன் கழகம், கம்பன் மணி மண்டபம், காரைக்குடி-2.**

## உள்ளுறை




1. முன்னுரை ... 7

2. அடியனேன் கண்ட கம்பன் ... 9
— கம்பன் அடிப்பொடி

3. கம்பன் எதற்கு? ... 11
— பொ. திருகூடசுந்தரம்

4. அடிமைக்கு உடைமையான ஆண்டான் ... 16
— ஜஸ்டிஸ் மு. மு. இஸ்மாயீல்

5. கைம்மாறு நாடாக் கருமம் ... 26
— T. S. ராமலிங்கம்

6. இராமன் நாடு திரும்பியது ... 28
— பெ. நா. அப்புஸ்வாமி

7. இராம காதையில் சில மறைபொருள்கள் ... 34
— கி. பக்ஷிராஜன்

8. காலமும் கணக்கும் நீத்த காரணன் ... 41
— அருட்பா S. R. தங்கவேலு

9. கம்பன் அருளிய இராமாவதாரத்தின் யாப்பு — சந்த வேறுபாடுகள் ... I
— கம்பன் அடிப்பொடி

# முன்னுரை

கம்பன் ஓர் உலக மகாகவி; கவிச் சக்கரவர்த்தி. காப்பிய வானில் கதிரவனுய் நின்று ஒளிர்பவன். இவன் கல்லாத கலேயும் வேதக்கடலும் உலகில் இல்லே எனலாம். ஒன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவன் எந்தைபிரான் கம்பன்.

முத்தரையரிடமிருந்து தஞ்சைப் பகுதியை மீட்டுச் சோழப் பேரரசை நிறுவிய விஜயாலயன் காலத்தில் மிளிர்ந்தவன் கம்பன். விஜயாலயன் மகன், கோதண்டராமன் எனப் பெயர் சூடிக்கொண்ட ஆதித்தன் (கி. பி. 871–907) காலத்தில், அவனுல் பெரிதும் மதிக்கப் பெற்ற வனுய் விளங்கியவன் கவிச்சக்கரவர்த்தி.

கம்பனேப் பெற்ற தந்தையினும் பேணிக் காத்து நின்றவர் சடையப்ப வள்ளல். இன்று கதிராமங்கலம் என விளங்கும் வெண்ணெய் நல்லூர்தான் சடையப்பர் வாழ்ந்த வளநகர். கம்பனின் பல்துறைப் புலமையும், எல்லேயிலாக் கவிதா சன்னதமும் கற்ருேரையெல்லாம் ஈர்த்து நின்றன. முடியுடைத் தார்வேந்தர்களும் ரசிகப் பெருமக்களும், கம்பனேப் பெரிதும் மதித்துப் போற்றுவாராயினர்.

கம்பனின் பேராற்றற் பெரும்புலமைக்கு என்றும் கட்டியங் கூறிக்கொண்டு விளங்குவது அவன் அருளிய இராமாவதாரம் என்னும் இராம காதை ! தமிழ்மொழியின் வளத்திற்கும், தமிழர் தலே நிமிர்வுக்கும் ஒப்பற்ற உதவியாய் நின்று நிலவுவது கம்பராமாயணம். தமிழ் மொழியின் தனிப்பெரும் காப்பியத்தை, என்னப்பன் கம்பன், சடையன் பதியாம் வெண்ணெய் நல்லூரில் அரங்கேற்றினுன். மன்னர்களும், மறையோர்களும், ரசிகப் பெருமக்களும், அறம் பேணும் பொதுமக்களுமாக நிறைந்திருந்த கண்ணியம் நிறைந்த அவைக்களத்திலே அரங்கேற்றம் நடைபெற்றது. பவித்திரமான அக்காப்பியம் அரங்கேறிய புனித விழா ஒரு பெருந்திருவிழா வாக, ''நாவலோ, நாவல் !'' என்று நடந்திருக்க வேண்டும்.

சகாப்தம் 807 ; கலியாண்டு 3986-க்குச் சரியான விசுவாவசு—பங்குனி 4ஆந் தேதி, (கி. பி. 886—பெப்ருவரி—23) புதன்கிழமை அஸ்த நட்சத்திரமே இராமாவதாரம் அரங் கேறிய பெருநாள். அன்றுதான் என்னுடையன் கம்பனே, ''கவிச்சக்கரவர்த்தி'' என்று அறி வுடையுலகம் மனமாரப் பாராட்டி விருதளித்து மகிழ்ந்தது.

கம்பன் பிறந்த நாளே நாமறிய எவ்வகைச் சான்றுகளுமில்லே. ஆனுல், ''கவிச்சக்கரவர்த்தி'' பிறந்த நாளே நாம் நன்கறிவோம். பங்குனி-அத்த நாளில்தானே ''கவிச்சக்கரவர்த்தி'' பிறந் தான் ! எனவே, இராமாவதாரம் அரங்கேறியதும் ''கவிச்சக்கரவர்த்தி'' என்ற விருதுப் பெயரைக் கம்பன் ஏற்றருளியதுமான அந்தப் பங்குனி அத்த நாளேயே கம்பன் திருநாளாக- ஜன்ம நட்சத்திரமாக - ஏற்று விழா எடுத்து வருகிருேம். மகம், பூரம், உத்தரம் ஆகிய முதல் மூன்று நாட்களில் காரைக்குடியில் உள்ள கம்பன் மணிமண்டபத்திலும், பங்குனி அத்த நாளில் நாட்டரசன்கோட்டையில் கவிச்சக்கரவர்த்தி சமாதிகொண்டு எழுந்தருளி அருள் சுரக்கும்

கம்பன் பள்ளிபடைத் திருக்கோயிலிலும், தூய இலக்கியப் பெருவிழாவாகக் கொண்டாடி மகிழ்கிறது கம்பன் கழகம்.

இவ்விழா, எவ்விதமான, சாதி, சமய, மொழி வேறுபாடின்றி யாவரும் கலந்து மகிழும் அருமையுடையதாகும். புலவர்களும், கலைஞர்களும், கவிஞர்களும், திறனாய்வாளர்களும், ரசிகர்களுமாக ஆயிரக்கணக்கானவர்கள் ஆண்டுதோறும் வந்து கலந்து கம்பன் புகழ் பாடியும், கம்பன் புகழ் பருகியும், பெருமை செய்கின்றனர்.

கம்பன் திருநாட் செலவு ஆண்டுக்காண்டு கூடிக்கொண்டே வருகிறது. முப்பத்தேழு ஆண்டுகட்கு முன் முந்நூற்றைம்பது ரூபாய் அளவில் தொடங்கிய கம்பன் திருநாளின் செலவு ஆண்டுதோறும் வளர்ந்து, எத்துணைச் சிக்கனமாக நடத்தினும், ரூபாய் பன்னீராயிரத்திற்குமேல் உயர்ந்துவிட்டது. விழாச் செலவுக்காக இதுவரை யாரையும் நன்கொடை கேட்டு அணுகிய தில்லை. நிலையறியும் உடனுறை நல்லன்பர்கள் தாங்களாகவே முன்வந்து உவந்தளிக்கும் நன்கொடை செலவின் ஒரு சிறு பகுதியையே ஈடு செய்கிறது.

இந்நிலையில் கம்பன் படைப்பினைப் பற்றிய கட்டுரைகளைத் தொகுத்துப் பயனுள்ள மலர் வெளியிடுவதென்றும், அதில் விளம்பரங்கள் வெளியிடுவதென்றும் முடிவு செய்யப்பெற்றது. அதற்குக் கம்பன்பால் அன்பும் அடியேன் பணியின்பால் பரிவும் உள்ள அன்பர்கள் பலர் விளம்பரங்கள் உதவி இப்புனிதப் பணிக்கு ஆக்கம் தர முன்வந்தனர்.

இவர்கட்கெல்லாம் எளியேன் என்ன கைம்மாறு இயற்றவல்லேன் ? என்னப்பன் கம்பனும், அவன் பரவிடும் முழுமுதற் பரம்பொருளும், இவ் அறவோர்கட்கும், இவர்களின் முயற்சிகட்கும், தொழில்துறை வாணிபங்கட்கும், எல்லா நலன்களையும் வளங்களையும் அருளிக் காத்தருள வேண்டுமென்று மன மொழி மெய்களால் வணங்கி வாழ்த்துகிறேன்.

எல்லா வகையாலும் முன்னரும், பின்னரும், கம்பன் திருநாளுக்கும், கம்பன் திருப்பணி கட்கும் உதவிய - உதவி வருகிற - அறவுள்ளம் படைத்த பெரியோர்கள் அன்பர்கள் யாவர்க்கும் என்றும் மறவா நன்றியுடன் பணிவார்ந்த வணக்கம் செலுத்தி மகிழ்கிறேன்.

கம்பன் மணிமண்டபம்,<br>காரைக்குடி - 623 002.<br>14, மார்ச், 1976.

அன்பும் பணிவுமுள்ள,<br>**கம்பன் அடிப்பொடி**<br>செயலாளன், கம்பன் கழகம்.

# அடியனேன் கண்ட கம்பன்

## கம்பன் அடிப்பொடி

**(இது 1940ஆம் ஆண்டு எழுதப் பெற்றது)**

தமிழனுக்குத்தான் என்ன துரதிர்ஷ்டம் !

யார் யார் உருவமெல்லாமோ படமாகி எங்கும் கிடைக்கிறது. கம்பன் படமோ?

எவராவது முன்வந்து ஏதாவது வழிகாட்ட மாட்டார்களா ?

பிறரைத்தான் எதிர்பார்க்க வேண்டுமா? நாமே ஏன் முயன்று பார்க்கலாகாது?

சரி ; எப்படிச் சித்திரிப்பது ? ஆதாரம் ?

இராமனுக்கும், கண்ணனுக்கும், ஏசுநாதருக்கும், சங்கரர்க்கும், இராமானுஜருக்கும் படங்கள் இருக்கின்றனவே ! ஆதாரம் என்ன ?

அப்படியானல் கம்பன் எப்படி இருந்திருப்பான் ? அவன் காலம் எது ? இடம் எது ? சைவனு ? வைணவனு ? அவன் மேற்கொண்ட சமயம்தான் எதுவோ ? அவன் சமயக்குறி பூண்டிருந்தானு ? யாரோடெல்லாம் உறவு கொண்டிருந்தான் ?

இவை என் மனக்கடலில் சென்ற சில ஆண்டுகளாக அலேமோதிக்கொண்டிருந்தன.

திருவழுந்தூர், ஸ்ரீரங்கம் ஆகிய இடங்களில் காணப்பெறும் கம்பன் உருநாட்டாகக் கருதப்பெறும் சிற்பங்களேச் சென்று தோய்ந்து ஆய்ந்து பார்த்தேன். அவை அத்திருப்பணிகளேச் செய்த நாயக்க மன்னர்களின் உருவங்களே என்பது தெளிவாகப் புலப்பட்டது.

எனவே, ஊகித்து ஒரு வழியாய் உருவத்தைச் சமைக்க வேண்டியதுதான்.

ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவன்; நல்ல உடல் வளம்; சோழ வளநாடே அவன் தழைத்துச் 'செவிநுகர் கனிகள்' சொரியத் தவம் புரிந்தது ; சோழன், சேரன், பாண்டியன் முதலான முடிமன்னர்கள், வாணன், ஆமூர் முதலி போன்ற பிரபுக்கள், சடையப்ப வள்ளலே ஒத்த பேருபகாரிகள் ஆகியவர்களே அவனேடு உறவாடி மகிழப் பாக்கியம் செய்தவர்கள்.

அவன் பிறப்பாலே சைவனுகலாம் ; அல்லது வைணவனுக இருந்திருக்கலாம். ஆனல், சமரச நெறி வழி ஒழுகி நெஞ்சு நேரான அறம் ஒளிரும் அருளாளன். சமயக் குறி ஏதேனும் அணிந்திருக்கவும் கூடும் !

நாம் எழுதுகிற படத்திலே கம்பனுக்கு ஐம்பதுக்குக் குறையாத வயது ; கட்டுத் தளராத மேனி; மேதைச் சுடர் விரியும் பரந்த வசீகர முகம் ; அகன்ற நெற்றி ; சோழன் போர்த்திய கனகாம்பரம் ; சடையன் தந்த நவமணிக் கண்டிகை ; சேரன் செலுத்திய வயிரக்கடுக்கன்; பாண்டியன் இட்ட மோதிரம்; வாணன் கொடுத்த கலிங்க நுண்ணூல் ஆடை-இவையெல்லாம் விளங்க வேண்டும்.

காவிரிக் கரையிலே, அந்திப் பொழுதிலே, பச்சைப் பசும்புல் மேடையிலே காம்பீர்ய நிலையிலே கம்பனைக் காண வேண்டும். அவன் திருமுகத்திலே கவிதைத் தேவி குதிகொள்வதைக் கண்டு களிக்க வேண்டும். அவன் அருகிலே பணிவே உருக்கொண்டாலன்ன கற்றுச் சொல்லி ஏடும் எழுத்தாணியுமாய் அமர்ந்திருக்க வேண்டும், கவிதை வெள்ளத்தை அள்ளிப் பருகும் தாகத்துடனே.

இன்ன சமயத்தன் என்று துணிய முடியாத நிலையில் எச்சமயக் குறியை அவன் நெற்றிக்கிடுவது ? நான் கட்டும் முடிவுக்கு உண்மை மாறுபட்டிருக்கு மானல், அஃது அடாத செயலன்றோ ?

அவன் எச்சமயத்தில் பிறந்தவனுயினும் எக்குறி தரிப்பவனுயினும் என்ன? அதைக் காட்டுவதா முக்கியம் ?

எனவே, எவ்வித அடையாளமும் இடல் வேண்டா.

ஒருவேளை, குறியே அணிந்திராமலும் இருந்திருக்கலாம் அல்லவா ?

அன்றி, மாலை வேளையில் கால்முகங் கழுவி அமர்ந்திருப்பதாகவும் கொள்ளலா மல்லவா ?

இங்ஙனம் அடியனேன் கற்பனைக் கண்ணுல் கண்ட கம்பனுக்கு எங்களூர் எஸ். கே. அய்யா ஓவியக் கையால் உருவந் தந்துள்ளார்.

கலைக் கண்கொண்டு இதைக் கண்டு மகிழ வேண்டும்.

# கம்பன் எதற்கு?

பொ. திருகூட சுந்தரம், எம். ஏ., பி.எல்

தமிழ்நாடு எங்கும் கம்பனைப் பற்றிய முழக்கம் நாளுக்கு நாள் அதிகமாக வளர்ந்து வருகிறது. மகாநாடுகள் நடத்துகிறார்கள்; விழாக்கள் கொண்டாடுகிறார்கள்; கட்டுரைகள் எழுதுகிறார்கள் ; சொற்பொழிவுகள் நிகழ்த்துகிறார்கள்; நூல்கள் எழுதுகிறார்கள்; புதுப்புது பதிப்புக்கள் வெளியிடுகிறார்கள்; கம்பனுக்குச் சிலை எழுப்புகிறார்கள்; இந்நிலைமையில் நான், 'கம்பன் எதற்கு, கம்பராமாயணத்தால் நமக்கு யாது பயன்?' என்று கேட்பது அசம்பாவிதமாகத் தோன்றும். கம்பனால், கம்பராமாயணத்தினால் பயன் இருப்பதனால் தானே இந்தக் காரியங்களெல்லாம் நடைபெறுகின்றன என்று கேட்பார்கள்.

ஆனால், ஒரு பொருள் என்ன பயன் அடைவதற்காக அமைந்துள்ளதோ, அந்தப் பயனை அறியாத சிலரும், அறிந்த சிலரும் அந்தப் பொருளை வேறு விதமாகப் பயன்படுத்துவதுண்டு. ஒரு பொருளுக்கென்று தனியாக உரியதான பயனைப் பெறாமல் வேறு விதமாக உபயோகித்துப் பயன்கள் பெற்றால் அந்தப் பொருளை உண்மையிலேயே பயன்படுத்திக் கொண்டதாக ஆகாது.

சைவ மதத்தினர் எல்லோரும் திருநீறு அணிகிறார்கள். ஆனால், அவர்களில் பெரும்பாலோருக்கு அதை அணியவேண்டுவதன் காரணம் யாது, அதனை அணிவதால் ஏற்படும் பயன் யாது என்பது தெரியாது. திருநீறு அணிவதால் என்ன பயனென்று கேட்டால், அது சைவ மதத்தினர் என்று காட்டும் ஒரு சின்னம் எனக் கூறுவார்கள். சிலர், 'நீறில்லா நெற்றி பாழ்' எனக் கூறியிருக்கிறதே எனக் கூறுவர். சிலர் 'மந்திரமாவது நீறு' என்று ஞானசம்பந்தர் பாடியுள்ள திருநீற்றுப் பதிகத்தை எடுத்துக் காட்டுவார்கள். ஆனால், திருநீறு அணிவதால் அடையும் பயன்கள் இவை யல்ல. எப்படி அசங்கியமான சாணத்தைத் தீயினால் சுட்டால் அழகான திருநீறு கிடைக்கின்றதோ, அது போல், மனத்திலுள்ள அழுக்குகளாகிய காம, வெகுளி, மயக்கம் என்பவற்றை அறிவினால் சுட்டெரித்து நீக்கினால் மனமானது தூய்மையுறும். ''மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறன்.'' இதயம் தூய்மை பெறும் பொழுதே இறைவன் அதில் கோயில் கொள்வான். இந்த உண்மையை அறியாத காரணத்தினால்தான், சிலர் சிவபூஜை செய்யும் சமயத்தில் திருநீறு அணிந்துகொண்டே வேலைக்காரர்களைக் கோபிப்பதை நாம் பார்க்கிறோம். இதற்குக் காரணம், பிறரைக் கோபித்தல் ஆகாது என்று நினைவூட்டுவதற்காகவே திருநீறு அணிவது என்னும் உண்மையை அவர்கள் அறியாததே ஆகும்.

என் மனைவி என் முன்னால் ஒரு தட்டில் வடைகள் கொண்டுவந்து வைக்கிறாள். நான் அவற்றை உண்டு, உடலில் நலமும் உரமும் பெற வேண்டும் என்பது அவளது நோக்கம். ஆனால், நான் அவற்றை எடுத்து உண்ணாமல் அவற்றின் உருவத்திலும், அழகிலும், மணத்திலும் ஈடுபடுகின்றேன் ; அவை எந்தப் பொருளால் ஆக்கப்பட்டிருக்கின்றன; அந்தப் பொருள் எங்கிருந்து கிடைக்கிறது; அதைக் கொண்டு என் மனைவி எவ்வாறு பக்குவஞ் செய்தாள் என்பன போன்ற ஆராய்ச்சிகளில் இறங்குகின்றேன். இவ்வாறு ஆராய்வது அறிவுக்கு

விருந்துதான். ஆனல், வடையின் தலையாய பயன் உணவாக உண்ணப்படுவதேயாகும். உண்ணுமல் ஆராய்ந்துகொண்டு மட்டுமே இருந்துவிடுபவர் வடையைப் பயன்படுத்தியவர்கள் ஆகார்.

இப்போது கம்பராமாயணத்தை நாம் பயன்படுத்துவதாக எண்ணுகிருேம். ஆனல், நாம் உண்மையிலேயே பயன்படுத்துகிருேமா, அல்லது அதற்குரிய பயனைப் பெறும் விதத்தில் உபயோகியாமல் வேறு விதமாக உபயோகிக்கிருேமா என்பதே என் கேள்வியின் நோக்கம்.

நாம், கம்பன் வான்மீகியிலிருந்து எந்த இடங்களில் வேறுபடுகிருன், அவன் வேறுபடுவது சிறந்து விளங்குகிறதா என்று ஆராய்கிருேம். இது போலவே இக்காலத்தில் சிலர், கம்பனுக்கும் துளசிதாசருக்குமுள்ள ஒற்றுமை, வேற்றுமை நயங்களைத் தேடுகிருர்கள்.

கல்வியிற் பெரியவன் கம்பன் என்று கூறுகிருர்களே, அது எந்த விதத்தில் என்று கேட்கிருர்கள். சிலர், கம்பன், குறள் போன்ற பண்டை இலக்கியங்களை எவ்வாறு பயன்படுத்துகிருன் என்று ஆய்கிருர்கள்.

சிலர், கம்பனுடைய சமயம் யாது, கம்பன் சமய சமரச நோக்குடையவனு அல்லனு, அதற்குரிய சான்றுகள் யாவை என்று கேட்டு, விடை காண்பதில் ஈடுபடுகின்றனர்.

சிலர், அயோத்தி மாநகர் வருணனையை வைத்துச் சமதர்மக் கொள்கைக்கு வழிகோலியவன் கம்பன் என்று காட்ட முனைகின்றனர்.

சிலர், தனிச் செய்யுட்களைப் பொறுக்கி, அவற்றின் சொல்நயம், பொருள் நயங்களை விளக்குகிருர்கள். சிலர், கம்பனுடைய காவியத்தின் அமைப்பு எத்துணைச் சிறந்தது என்று காட்டுகிருர்கள். சிலர், கதாபாத்திரங்களின் குணச்சித்திரங்களை வரைகிருர்கள்.

சிலர், இராவணன் தமிழருடைய மூதாதை என்று காட்ட விரும்புகிருர்கள். சிலர், இராமாயணம் இதிகாசமா, வரலாரு என்று ஆய்கிருர்கள்.

சிலர், எந்தச் செய்யுட்கள் கம்பன் இயற்றியவை ; எந்தச் செய்யுட்கள் கம்பன் இயற்ருமல் இடையில் செருகப்பட்டவை என்று கண்டுபிடிப்பதில் கருத்தைச் செலுத்துகின்றனர். சிலர், இதுதான் சரியான பாடம் என்று வாதிப்பதில் முனைகின்றனர்.

ஆனல், இத்தகைய ஆராய்ச்சிகள் எல்லாம் கம்பனைப் பயன்படுத்தியதாக ஆகுமா? ஆகாது என்பதே என்னுடைய கருத்து. அப்படியானல் கம்பனை எப்படி உபயோகித்தால் பயன்படுத்தியதாக ஆகும் என்று கேட்கலாம். வடையை ஆராய்ச்சிப் பொருளாக உபயோகியாமல் உணவாக உபயோகிக்க வேண்டும் என்று ஒரே சொல்லில் கூறுவது போல், கம்பராமாயணத்தையும் ஆராய்ச்சிப் பொருளாக உபயோகியாமல் கவிதையாக உபயோகிக்க வேண்டும் என்று விடை கூறுவேன்.

கவிதையாகப் பயன்படுத்துவது எவ்வாறு? கவிதை இயற்றப்படுவதன் நோக்கத்தை அறிந்துகொண்டால் கவிதையைப் பயன்படுத்தும் முறை தெரிந்துவிடும். மனிதன் மனத்தில் காணப்படும் நிகழ்ச்சிகள், கருத்துக்கள் என்றும், உணர்ச்சிகள் என்றும் இருவகைப்படும். நான், என் மனத்திலுள்ள கருத்துக்களைச் சொற்களை உபயோகித்துப் பிறர் மனத்திலும் உண்டாகுமாறு செய்தால், அது விஞ்ஞானமாகும். நான், என் மனத்திலுள்ள உணர்ச்சிகளைச் சொற்கள் உதவிகொண்டு பிறர் மனத்திலும் உண்டாகுமாறு செய்ய முடியுமானல், அது கவிதையாகும். கவிஞன் ஒரு விஷயத்தைப் பார்க்கிருன், அல்லது சிந்திக்கிருன். அவன் மனத்தில் உணர்ச்சி நிரம்புகிறது. அதைப் பிறர்க்கும் உண்டாக்க விரும்புகிருன். அதற்காக அந்த விஷயத்தை வைத்துச் செய்யுட்கள் செய்கிருன். அந்தச் செய்யுட்களை நாம் படிக்கும்பொழுது நம்முடைய மனத்தில் உணர்ச்சி உண்டாகுமாயின் கவிஞன் கருத்து நிறைவேறிவிட்டது; வெற்றி பெற்றுவிட்டான். ஒரு செய்யுள் தொகுதியைப் படிக்கும்போது உணர்ச்சி உண்டாகவில்லையானல் அப்போது அத்தொகுதி கவிதையாகாது, வெறும் சொற்ருெடர்களே.

ஆகவே, நாம் கவிதைகளைப் படிப்பது கருத்துக்கள் பெறுவதற்காகவன்று. கருத்துக்களைத் தருவது விஞ்ஞானமே, கவிதையன்று. கவிதையைப் படிப்பது உணர்ச்சிகளை அனுபவிப்பதற்காகவே. இந்த உண்மையை மறவாமல் மனத்தில் கொண்டால் மட்டுமே நாம் எந்தச் செய்யுளையும் கவிதைதானு என்று அறியவும், கவிதையானல் அதைப் பயன்படுத்த வேண்டிய முறையையும் தெரிந்துகொள்வோம்.

கவிஞன் எவ்வாறு கவிதை மூலம் தன்னுடைய உணர்ச்சிகளை நமக்கு ஊட்டுகின்ருன்

என்ற விஷயத்தை ஆராய்வதும் கவிதையைப் பயன்படுத்துவதாக ஆகாது. அதுவும் ஆராய்ச்சிப் பொருளேயாகும் என்பதை வற்புறுத்த விரும்புகிறேன். அந்த ஆராய்ச்சியும் அறிவுக்கும் ஒரு விருந்தாயிருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால், அது உணர்ச்சிக்கு அணு வளவும் பயன்படாது.

கவிதை மூலம் உணர்ச்சி பெறவேண்டி யிருப்பதால் அறிவுக்கு அதிக வேலை தரலாகாது. கவிதையைப் படிக்கும்போது அறிவு ஆராயப் புகுந்துவிடுமானால் அப்போது உணர்ச்சி உண்டாகாது. கவிதை படிப்பதால் பயன் பெற மாட்டோம். ஆதலால், படிக்கும் கவிதையை ஒருவாறு அறிந்துகொள்ளும் அளவுக்கு மட்டுமே அறிவு வேலை செய்ய வேண்டும்.

அதனால் படிக்கும் கவிதையை நன்றாக அறிந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை. உரைகளையும் இலக்கண நுணுக்கங்களையும் சொற்சுவை பொருட்சுவைகளையும் அறிந்து கொள்ள வேண்டிய அவசியமே இல்லை.

அவசியமில்லை என்பது மட்டுமன்று, ''நன்றாக அறியாதபோதே நாம் கவிதையை நன்றாக அனுபவிக்க முடியும்''என்று ஆங்கில மகாகவிகளில் ஒருவரான ''கோல்ரிட்ஜ்'' என்பவர் எச்சரிக்கை செய்கிறார். இதே கருத்தை, ருஷ்ய நாட்டு இலக்கிய வரலாறு எழுதியுள்ள ருஷ்ய அறிஞர் ''குரோப்பாட்கின்'' என்பவரும் தமது ''சுய வாழ்க்கை வரலாறு'' என்னும் சிறந்த நூலில் கூறுகிறார்.

இங்கிலாந்து நாட்டுக் கவிஞர்களுள் ஒருவரான டி. எஸ். எலியட் என்பவர், ''நான் எந்தப் பாடல்களில் அதிகமான ஈடுபாடு உடையவனாக இருக்கிறேனோ அந்தப் பாடல்களை ஆரம்பத்தில் நன்றாகப் புரிந்துகொண்டேன் என்று சொல்லமாட்டேன். அது மட்டுமன்று, அந்தப் பாடல்களில் சிலவற்றை இன்னும் நன்றாகப் புரிந்துகொள்ளவில்லை என்றும் கூறுவேன்'' என்று சொல்கிறார்.

ஆதலால், கவிதைகளை வயது வந்தவர்கள் மட்டும் பயன்படுத்த முடியும் என்பதில்லை ; சிறுவர் சிறுமிகளும் பயன்படுத்தமுடியும். இந்த உண்மையும் மிக முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டியதாகும். விஞ்ஞானம் போன்ற அறிவு நூல்களைக் கற்பதற்குப் பயிற்சியும் ஓரளவு அறிவும் தேவை. ஆனால், கவிதைகளை அனுபவிப்பதற்கு எவ்வித அறிவும் பயிற்சியும் தேவையில்லை. அறிவின் அளவு மக்களிடையே வேறுபடும்; ஆனால், உணர்ச்சியின் அளவு அத்துணை வேறுபடுவதில்லை.

பிரான்ஸ் நாட்டில் அனட்டோல் பிரான்ஸ் என்னும் பெயருடைய, உலகப் பிரசித்தி பெற்ற பெரிய எழுத்தாளர் ஒருவர் இருந்தார். அவர் சிறுவராயிருந்தபோது ஹோமர் எழுதிய இதிகாசத்திலிருந்து எழுதிய கதையைப் பாடசாலையில் கற்று வந்தார். ஆனால், அது அவருக்குச் சுவையாகத் தோன்றவில்லை. அவர் பின்னர் ஒரு நாள், தம் தந்தையார் மேசை மீதிருந்த ஹோமருடைய இதிகாச காவியத்தைத் தற்செயலாய்க் கண்டார்; எடுத்துப் படித்தார்; இன்ப உலகில் புகுந்துவிட்டார். ''எதற்காகஆசிரியர்கள் எங்களுக்கென்று ஹோமரைக் கொலை செய்து கதை எழுத வேண்டும்'' என்று சிந்தித்தார். பெரியவர்களைப் போலவே சிறுவர்களும் காவியங்களைச் சுவைக்க முடியும் என்பதை அழுத்தமாக வற்புறுத்துகிறார்.

இங்கிலாந்து நாட்டில் பிரிட்ஜெஸ் என்பவர் ஆஸ்தான கவிஞராக இருந்தார். மிகச் சிறந்த கவிஞர் என்று பேரும் புகழும் பெற்றவர். அவர் சிறுவர்களுக்கென்று குழந்தைப் பாடல்கள் இயற்றுவதை வெறுக்கின்றார். பெரியோர் படிக்கும் பாடல்களைச் சிறுவர்களும் படித்துச் சுவைக்க முடியும். அப்படியிருக்க, குழந்தைப் பருவத்தில் படித்துவிட்டுப் பெரியவராகும்போது மறந்துவிடுவதற்காக ஏன் குழந்தைப் பாடல்கள் என்ற பயன்படாச் செய்யுட்களை இயற்றிக் குழந்தைகளைக் கஷ்டப் படுத்த வேண்டும், குழந்தைகளைச் சிறந்த காவியங்களைச் சுவைக்கவிடாமல் தடுத்து அவர்களுடைய சுவை-அறிவை ஏன் நாசமாக்க வேண்டும் என்று கேட்கின்றார்.

குழந்தைகள் விஷயத்தில் இந்த இரண்டு அறிஞர்களும் கூறுவது சரிதானா என்றுசோதிக்க விரும்பினேன். முப்பது ஆண்டுகளுக்கு முன் நான் செட்டி நாட்டிலுள்ள அமராவதிபுதூர் என்னும் ஊருக்குப் போயிருந்தேன். அங்கே என் நண்பர் பிச்சப்பா, தமது பெண் பாடசாலையில் குழந்தைகட்கு நான் ஏதேனும் கற்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். என் சோதனையை நடத்த இது தக்க சமயம் என்று எண்ணினேன்.

அந்தப் பாடசாலையில் ஐந்து வகுப்புக்கள் இருந்தன. ஐந்தாவது வகுப்பில் படித்த பத்துப் பன்னிரண்டு வயதுச் சிறுமிகளுக்குக் கம்பராமாயணம் படித்துக்காட்டத் தீர்மானித்தேன். இராமனும் இலக்குவனும் சுமித்திரையிடம் விடை பெற்றுக்கொள்ளும் கட்டத்தைத் தெரிந்தெடுத்தேன்.

முதலில் அவர்களுக்குக் கதையைச் சுருக்கமாகக் கூறினேன். அதன்பின் செய்யுட்களில் வரும் அருஞ்சொற்களுக்கு மட்டும் பொருள் கூறினேன். அதன்பின் ''நான் செய்யுட்களைப் படிப்பேன் ; யாரும் கேள்வி கேட்கக் கூடாது, மௌனமாகக் கேட்டுக்கொண்டிருக்க வேண்டும், நான் படித்து முடித்த பின்னரே பேச வேண்டும்'' என்று சொல்லிவிட்டுப் படிக்கலானேன்.

**''பின்னும் பகர்வாள் : 'மகனே! 'இவன்பின்
செல் தம்பி
என்னும் படியன்று, அடியாரினில் ஏவல் செய்தி
மன்னும் நகர்க்கே இவன் வந்திடின்வா,
அதன்றேல்
முன்னம் முடி' யென்றனர் பான்முலை சோர
நின்றாள்''**

என்னும் பாடலைப் படித்து நிறுத்தினேன். குழந்தைகளைப் பார்த்தேன். ஒருவர் பாக்கியின்றி அனைவரும் வார்விழி சோர உட்கார்ந்திருந்தனர். இந்தச் சம்பவத்தை நினைக்கும் போதெல்லாம், என் நண்பருடைய அண்ணன் மகள் வள்ளி என்னும் 12 வயதுச் சிறுமி - எனக்கு முன் உட்கார்ந்திருந்தவள் - கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தது என் கண் முன் வந்து தோன்றுகிறது.

குழந்தையானது வடையைப் பற்றி ஆராய முடியாது ; பிறர் ஆராய்வதை அறிந்துகொள்ளவும் முடியாது. ஆனால், வடையை உண்ண முடியும், உண்டு சுவைக்க முடியும். அதுபோல், கவிதையை ஆராயத் தெரியாது குழந்தைகளுக்கு; ஆனால், அவர்களுக்கு அனுபவிக்கத் தெரியும். நம்மைவிடக்கூட அதிகமாக அனுபவிப்பர். நம்முடைய மனம் கல்லால் கோடு கிழித்த கரும்பலகை அல்லவா ?

இனி, இறுதியில் கேட்க வேண்டிய கேள்வி ஒன்று உளது. கவிதை என்பது உணர்ச்சி பெறுமாறு அனுபவிப்பதற்காக இயற்றப்பட்ட ஒன்று, அறிவு பெறுமாறு ஆராய்வதற்காக இயற்றப்பட்டதன்று என்பதும், அதனால், கவிதையால் உணர்ச்சி பெறும்போதே கவிதையைப் பயன்படுத்தியவர்கள் ஆவோம் என்பதும் உண்மைதான். ஆனால், கவிதையைக் கொண்டு உணர்ச்சி பெறுவதால் நாம் அடையும் பயன் யாது ?

மனித வாழ்க்கையின் அடிப்படை, ஒழுக்கமாகும். சிலர் இன்பம் என்று கூறுவர். ஆனால், இன்பமும் அறத்தால் வந்தால் மட்டுமே இன்பமாக இருக்கும்.

அதையே வள்ளுவர்,

**'அறத்தால் வருவதே இன்பம் மற்றெல்லாம்
புறத்த, புகழு மில'**

என்று வற்புறுத்திக் கூறுகின்றார்.

இத்தகைய ஒழுக்கத்தில் நின்று இன்பம் துய்ப்பதற்கு உறுதுணையாகவுள்ளன அறிவும் உணர்ச்சியுமாகும். அறிவு, அறம் இது, அறமல்லாதது இது என்று காட்டும். ஆனால், அறிவு காட்டும் அறத்திடம் அடங்காத அன்பு உண்டானால் மட்டுமே நாம் அறச்செயலில் இறங்குவோம். இல்லையானால், அறிந்ததோடு சரி ; கற்போம், நிற்க மாட்டோம்.

ஆதலால், ஒவ்வொருவரும் நல்லுணர்ச்சிகளைத் தம்மிடம் வளர்த்துக்கொள்ள வேண்டும். பொதுவாக, இயற்கையன்னை ஒவ்வொருவர்க்கும் நல்லுணர்ச்சிகளை அருளியேயுள்ளாள். அவ்வுணர்ச்சிகளின் வன்மை குறைந்தும் நிறைந்துமிருக்கலாம் ; ஆனால்,அவை எல்லோரிடமுமுண்டு.

எல்லோரிடமும் அறிவு இருக்கிறது. அதனால்தானே கல்வி தந்தால் அறிவு பெறுகிறோம். ஆயினும், உடன்பிறந்த அறிவுத் திறனுக்குப் பயிற்சி அளித்து வராவிட்டால் அது வளராது, வன்மை பெறாது. இதை எல்லோரும் ஏற்றுக்கொள்வர்.

ஆனால், அறிவுக்குப் பயிற்சி தருவது போல் உணர்ச்சிக்கும் பயிற்சி தரவேண்டும் என்பதை எளிதில் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள், ஏற்றுக் கொண்டாலும் நடைமுறையில் பயன்படுத்துவதில்லை. ஆயினும், உணர்ச்சிக்குப் பயிற்சி தருவது எப்படி ?

சைக்கிளில் ஏறிப் போகும்போது எதிரில் வண்டி வந்ததைக் கண் பார்த்ததும் கை பிரேக்கைப் பிடித்து வண்டியை நிறுத்துகிறது. ஆனால், சைக்கிள் விடப் பழக ஆரம்பித்த

காலத்தில் கண் பார்த்தவுடன் கை வேலை செய்யவில்லை. கண் பார்த்து அறிவு கூறிய பின்னரே கை வேலை செய்ய ஆரம்பிக்கும். ஆனுல், பல நாள் பயின்றபின் அறிவுக்கு வேலை யில்லாமல் ஆகிவிட்டது. கண்ணும் கையும் உறவு கொண்டுவிட்டன.

நான் சாலையில் போகும்போது ஒரு கிழவி கீழே விழுந்துவிடுவதைப் பார்க்கிறேன். தூக்கி விட வேண்டுமென்ற இரக்க உணர்ச்சி உண்டா கிறது. ஆனுல், அந்த உணர்ச்சி வன்மையுடை யதாக இல்லை. அதனுல் அறிவு இடையே புகுந்து, அந்தக் கிழவி ஆபாசமாயிருக்கிருளே என்று கூறியதும் இரக்க உணர்ச்சி எழுந்தது உறங்கிவிடுகிறது. ஆனுல், இரக்க உணர்ச்சி அடிக்கடி எழுந்துவருமானுல் நாளடைவில் அது அறிவு கூறுவதைக் கேட்காத அளவுக்கு ஆற்ற லுடையதாக ஆகிவிடும். கிழவி கீழே விழு வதைக் கண்டதும் ஓடிப் போய்த் தூக்கிவிடு வேன்.

சைக்கிள் என்னிடமிருக்கிறது. அதனுல் நான் அடிக்கடி அதில் ஏறிப்போய்ப் பிரேக்கைப் பிடிக்கப் பயிற்சி செய்துகொள்ளலாம். ஆனுல், நான் சாலையில் போகும் போதெல்லாம் ஒரு கிழவி வந்து, கீழே விழுந்து எனக்குப் பயிற்சி தர முடியுமா ? அப்படியானுல் என்னுடைய இரக்க உணர்ச்சி வன்மையடைவதற்காகப் பயிற்சி பெறுவது எப்படி ?

உணர்ச்சிகளுக்குப் பயிற்சி அளிப்பதற்காக அமைந்த சாதனமே கவிதை. அதுதான் அதன் தலையாய உபயோகம். இரக்க உணர்ச்சி வரக் கூடிய பாடல்களை நான் அடிக்கடி படித்து இரக்க உணர்ச்சியைப் பெற்று வந்தால், கிழவி கீழே விழுவதைக் கண்டதும் ஓடி எடுக்கக்கூடிய அளவு இரக்க உணர்ச்சி, வன்மை பெற்றுவிடும்.

கம்பராமாயணம் மனிதன் அடைய வேண் டிய எல்லா விதமான நல்லுணர்ச்சிகளுக்கும் தக்க விதமாகப் பயிற்சியளிக்கக்கூடிய கவிதை யாகும். எல்லா விதமான நல்லுணர்ச்சிகளி லும் தலையானது அன்பு உணர்ச்சியே. அதுவே தாய், தந்தையர், சகோதரர், குரவர், கிழோர், நண்பர் என்று பலவித உறவினர்களிடம் செல் லும்போது வேறு வேறு பெயர்களுடன் சிறந்து விளங்குகிறது. அந்த அன்புணர்ச்சி கைவரப் பெற்றுல் மற்ற உணர்ச்சிகள் எல்லாம் தாமா கவே வந்து சேர்ந்துவிடும்.

''அன்பின் வழியது உயிர்நிலை'' என்பது தமிழ் மறை. அனட்டோல்பிரான்ஸ் என்ற பெரியாரிடம் ஒருவர், கவிதையால் என்ன பயன் என்று கேட்ட போது அப்பெரியார், ''அன்பு செய்யக் கற்றுத்தரும்'' என்று கூறினுர். கம்ப ராமாயணம் அந்தப் பாடத்தை மிகமிகத் திறமையாகக் கற்றுக்கொடுக்கும். அவ்வுணர்ச்சி எவரிடம் ஆற்றலுடையதாக இருக்கின்றதோ அவரே இன்ப வாழ்வு வாழத் தகுந்தவர்.

**''அன்பினைக் கைக்கொள் என்பான்—துன்பம்**
**அத்தனையும் அப்பொழுதே தீர்ந்திடும்**
**என்பான்''**

என்று பாரதியார் பாடுவது முற்றிலும் உண்மை.

அத்தகைய அமிர்த சஞ்சீவியைப் பெறு வதற்காகக் கம்பர் பெருமான் இராமாயணத் தை இயற்றி அருளியிருப்பது, தமிழ்மக்கள் தங் களை அறியாமலே செய்த தவத்தின் பயனே என்பதில் சந்தேகமில்லை. ஆகவே, கம்பன் எதற்கு? - அவன் அளிக்கும் அமுதத்தைப் பருகி ஆனந்த வாழ்வு பெறவே.

ஆதலால், மகாநாடுகளிலும் விழாக்களி லும் கம்பனைப் பற்றிய ஆராய்ச்சி உரைகள் நிகழ்த்துவதுடன் நிற்காமல், கம்பராமாயணத் தில் ஏதேனும் ஒருகட்டத்தை எடுத்து உணர்ச்சி உண்டாகத்தக்கவாறு ஒருவர் படித்துச் சபை யோரை உணர்ச்சி வயப்படுமாறு செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யாத வரை கம்பனைப் பயன்படுத்தியவர்கள் ஆக மாட் டோம்.

ஆதலால், கம்பனைப் பற்றிப் படிப்பதை விட்டுவிட்டுக் கம்பனையே படியுங்கள் என்று தாழ்மையாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.



# அடிமைக்கு உடைமையான ஆண்டான்

ஜஸ்டிஸ்
மு. மு. இஸ்மாயில்

இராம பக்திக்கு அனுமனே எடுத்துக்காட்டாக எல்லோராலும் கொள்ளப்படுகிறன். இராமனுக்கு அனுமன் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது. இராம கதையின் போக்கில் அனுமனுடைய உதவி இல்லாவிட்டால், இராமனுல் சீதை இருக்குமிடத்தைத் தெரிந்து கொண்டிருக்க முடியாது. இராவணனைக் கொன்று சீதையைத் திரும்பப் பெற்றிருக்கவும் முடியாது. சீதையைத் தேடும் முயற்சியிலும், இராவணனைக் கொல்லும் முயற்சியிலும் இராமனுக்கு உதவியவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறர்கள். அவர்கள் செய்த உதவிகள் எல்லாவற்றையும்விட அனுமன் செய்த உதவி தான் தலைசிறந்த உதவி. ஏனென்றல், வேறு யாரும் செய்ய முடியாதவற்றை அனுமன் செய்திருக்கிறன். அனுமன் செய்த அத்தகைய செயல்களில் முக்கியமானவை மூன்று ஆகும். ஒன்று, கடலைத் தாண்டி இலங்கைக்குச் சென்று, சீதை அங்குச் சிறை வைக்கப்பட்டிருப்பதைக் கண்டுபிடித்து வந்தது. இரண்டாவது, இந்திரசித்து விடுத்த பிரம்மாத்திரத்தினுல் மாண்டு கிடந்த இலக்குவன் முதலியோரை மருந்து மலையைக் கொண்டுவந்து உயிர்ப்பித்தது. மூன்றுவது, இராவண வதத்திற்குப் பின், இராமன் அயோத்தி திரும்புகையில் பரத்துவாச முனிவருடைய ஆசிரமத்தில் தங்கியிருந்தபோது, 'பதினன்காண்டுகள் கடந்துவிட்டன ; இன்னும் இராமன் அயோத்திக்கு மீண்டிலன்' என்ற எண்ணத்துடன் அயோத்தியில் தீக்குளிக்கப் போந்த பரதனிடம் செய்தி சொல்லி அவன் உயிரை மாய்த்துக் கொள்ளாமல் தடுத்தது.

இராவணன் சீதையை இலங்கைக்கு எடுத்துக்கொண்டு போய் அங்கே சிறை வைத்திருக்கிறன் என்ற செய்தியைச் சம்பாதி சொன்ன பிறகு, வானரர்கள் தங்களுக்குள் யார் கடலைக் கடந்து, இலங்கைக்குச் சென்று, இந்தச் செய்தியை உறுதி செய்துகொண்டு வருவது என்று யோசிக்கிறர்கள். ''போர்க் கொற்றம் கெழு'' நீலன் முதலிய பெருவீரர்கள் கடல் கடக்கும் வல்லமை தங்களுக்கு இல்லை என்பதை வெளிப்படையாகக் கூறிவிடுகிறர்கள். வாலி குமாரனுகிய அங்கதனே, ''கடலைக் கடந்து இலங்கை சென்றுவிடுவேன்; ஆனல், மீளும் திறமை எனக்கு இல்லை'' என்று கூறிவிடுகிறன். சாம்பவானும், முன்னர் மேருமலை மோத இளைத்துக் கால் வருந்தியதன் காரணமாக, கடலின் மீது எழும்பித் தாவி, இலங்கையின் மதில்களின் மீது குதித்துச் சென்று, சீதையைத் தேடிக் கண்டு இங்கு உடன் மீளும் திறன் தனக்கு இல்லை என்று சொல்லிவிடுகிறன். அப்படிச் சொல்லிவிட்டு, இக்காரியத்தைச் சாதிக்கக்கூடிய வல்லமை பெற்றவன் அனுமன் ஒருவனே என்று கூறி முடிக்கிறன். அதன் மேல்தான் அனுமன் கடலைத் தாண்டி, இலங்கைக்குச் சென்று, சீதையைக் கண்டு திரும்பி, இராமனுக்குச் செய்தி தெரிவிக்கிறன்.

இந்திரசித்து விடுத்த பிரம்மாத்திரத்தினுல் இலக்குவன் விழுந்து கிடக்கிறன். போர்க்களத்திற்கு வந்து இதனைக் கண்ட இராமன், இலக்குவன் இறந்தான் என்று பலபடப் புலம்பி, அறிவு சோர்ந்து துயிலுறுகிறன். அப்போது சாம்பவான், ''கடிது போய் மருந்து கொண்டு

வா'' என்று அனுமனைப் பணிக்கிறான். ''இலக்குவன் இறந்தானேயானால், இராமன் இறப்பது திண்ணம் ; ஆகையால், மாண்டு கிடக்கும் சேனையோடு இராம இலக்குவர் இருவரையுமே வாழவைப்பதற்கு நீ மருந்து கொண்டுவர வேண்டும் ; உன்னுடைய அந்தச் செயலால், அவர்கள் மாத்திரமல்லாமல், மூவுலகும் மறைகளும் தரும தேவதையும் வாழ்ந்தனவாகும்'' என்று சாம்பவான் கூறுகிறான். இதனைக் கம்பன் மிக அழகாக,

**''எழுபது வெள்ளத் தோரும், இராமனும், இளைய கோவும்,**
**முழுவது மிவ்வுலகம் மூன்றும், நல்அற மூர்த்தி தானும்,**
**வழுஇலா மறையும் உன்னால் வாழ்ந்தன ஆகும்; மைந்த !**
**பொழுதுஇறை தாழாது, என் சொல் நெறிதரக் கடிது போதி!'**

*(யுத்த காண்டம்-மருத்துமலைப் படலம், 23)*

என்று குறிப்பிடுகிறான். இதற்குப் பிறகுதான் அனுமன் சூரியோதயத்துக்கு முன்னால் மருத்து மலையைக் கொண்டுவந்து எல்லோரையும் பிழைக்கச் செய்கிறான்.

பரத்துவாச முனிவருடைய உபசாரத்தை ஏற்றுக்கொண்டு, அவன் அளித்த உணவை உண்ணும் காலையில் இராமன் அனுமனைப் பார்த்து, அயோத்தி சென்று, பரதனிடத்துத் தன்னுடைய நலத்தைக் கூறி உடன் திரும்புமாறு பணிக்கிறான். அப்பணியை மேற்கொண்டு அனுமன், வாயுவின் வேகமும் இராமனுடைய அம்பின் வேகமும் தன்னுடைய மனமுங்கூடப் பின்னாகும்படி விரைந்து செல்கிறான். இதனைக் கம்பன்,

**''தந்தை வேகமும், தனது நாயகன் தனிச்சிலையின்**
**முந்து சாயகக் கடுமையும், பிற்பட முடுகி,**
**சிந்தை பின்வரச் செல்பவன்''**

*(யுத்த காண்டம் — மீட்சிப் படலம்-44)*

என்று கூறுவான். இப்படியாக அயோத்திக்குச் சென்ற அனுமன், தீக்குளித்துத் தன்னை மாய்த்துக்கொள்ள இருந்த பரதனுடைய உயிரைக் காப்பாற்றுகிறான், ''இருப்பன ஆயின, உலகம் யாவையும்.''

அனுமனுடைய இத்தகைய செயல்கள் ஒப்புயர்வற்றன ; வேறு யாராலும் செய்ய முடியாதன. இதன் காரணமாகத்தான் அனுமனை உலகம் தலைசிறந்த இராம பக்தனாகவும், இராமனுடைய தொண்டனாகவும் சேவகனாகவும் கொண்டாடுகிறது; போற்றுகிறது ; புகழ்கிறது; வணங்குகிறது. இராமனுடைய தொண்டன் ''அடிமை'' என்பதைத் தவிர வேறு எந்த விதமான உறவையும் இராமனோடு கொள்ளாதவன் அனுமன். அத்தகைய அனுமனை இராமன் எப்படி நடத்தினான் ; அவன்மாட்டு இராமன் உள்ளப்போக்கு எப்படி இருந்தது என்பதையும் பார்க்க வேண்டும்.

கவந்தன், சபரி ஆகியவர்களின் ஆலோசனைப்படி சுக்கிரீவனது உதவியை நாடவும், சீதையைத் தேடவும் இராம இலக்குவர் செல்கின்றனர். அவர்களைக் கண்ட சுக்கிரீவன், அவர்கள் வாலியினால் ஏவப்பட்டு வந்த பகைவராயிருப்பரோ என்று ஐயுற்று, அஞ்சி ஓடுகிறான். அனுமன், ''அஞ்ச வேண்டா'' என்று சுக்ரீவனிடம் சொல்லிவிட்டு, வருபவர்கள் யாரென்று தெரிந்துவரும் பொருட்டுச் செல்கிறான். ஒரு மாணவப் படிவம் எடுத்து மறைந்து நின்று பார்க்கிறான். ''வெஞ்சமர் தொழிலர் ; தவமெய்யர் ; கைச்சிலையர்'' என்று அவர்களைப் பற்றிச் சிந்தித்து, ''அவர்கள் யாராய் இருக்கக் கூடும்'' என்று யோசிக்கிறான். ''தேவர்களுக்கெல்லாம் தலைமையாகிய முதல் தேவரோ என்றால், அவர் மூவர் ; இவர் இருவரே. வலிமை பொருந்திய வில்லினைக் கையில் தாங்கிய இவ்விருவரையும் இவ்வுலகில் ஒப்பார் எவரும் இல்லை. இவர்க்கு அரியது எனவும் ஒன்றுமில்லை. இவர் இத்தன்மையர் என அறுதியிடுவதும் முடிவதில்லை'' என்று கருதுகிறான். அவர்களைக் கூர்ந்து பார்த்து, ''சிந்தையில் சிறிது துயர் சோர்வுற, அதனால் நொந்து அயர்த்தவர் அனையர் ; ஆனால், எளிதில் வருத்தமடையக்கூடிய சிறியர் அல்லர் ; அந்தரத்து அமரர் அல்லர் ; மானிடப் படிவர் ; மிக அரிய பொருள் ஒன்றினைத் தேடுகின்ற நிலையில் இருப்பவர்'' என்று அவர்களை நிதானிக்கிறான்.

''தருமமும் தகவுமே தனமெனும் தகையவர் இவர். அருமருந்து அனையதோர் பொருள் இடையிலே தவறிப்போக, அதனை இருமருங்கிலும் நெடிது துருவுகின்றவர்களாகக் காணப்படுகின்றனர். கோபமென்பதே இல்லாதவர்களாகவும், கருணையின் கடல் போன்றவர்களாகவும், இதம் என்பது தவிர வேறொரு இயல்பு இல்லாதவர்களாகவும், இந்திரனே அஞ்சத்தக்க கம்பீரமான தோற்றமுள்ளவர்களாகவும், தரு

மனே அஞ்சத்தக்க நல்லொழுக்கமுள்ளவர்களாகவும், மன்மதன் அஞ்சத்தக்க வடிவழகு உள்ளவர்களாகவும், எமனே அஞ்சத்தக்க வல்லமை உள்ளவர்களாகவும் இருக்கிறார்கள்'' எனப் பலவும் எண்ணி, அவ்விருவரையும் நன்றாகப் பார்க்கிறான். அவன் உள்ளத்தில் அன்பு சுரக்கிறது; நெஞ்சம் நெகிழ்கிறது. முன்னர்ப் பிரிந்த அன்பர்களை மீண்டும் கண்டவன் போன்ற நிலையினனாக நிற்கிறான். இயற்கையில் மிகக்கொடிய விலங்குகளான காட்டு யானைகள் இவர்கள்பால் கன்றுகளைக் கண்டாற் போலக் கனிவுடன் நடந்துகொள்வதையும், சிங்கம், புலி போன்ற துஷ்ட மிருகங்களும் இவர்கள் பின் சென்று காதல்கூர இரங்குவதையும், மயில் முதலிய பறவைகள் இவர்களுடைய அழகிய திருமேனியின்மேல் வெயில் படுவதைக் கண்டு இரங்கித் தங்கள் பெரிய சிறகுகளைப் பந்தராகப் பரப்பி, மதில் போல அவர்களைச் சூழ்ந்துகொண்டு உடன் வருவதையும், ஆகாயத்தின் மேகக் கூட்டங்கள்நெருங்கிச் சூழ்ந்து எங்கணும் மெல்ல மெல்லத் திவலை சிந்தி இவர்களைத் தழுவுவதையும், நெருப்புப் போலச் சுடுகின்ற கற்கள்கூடக் கள்ளுடை மலர்கள் போல அவர்கள் தூய செங்கமல பாதம் தோய்தொறும் குழைந்து தோன்றுவதையும், அவர்கள் போகும் திசைகள்தோறும் புல்லொடு மரமுமெல்லாம் தொழுவதுபோலச் சாய்வுறுவதையும் கண்டு, 'இவர்கள்தாம் தருமமோ' என்று எண்ணுகிறான்.

''இவர்களைக் கண்டு, என்பு நெக்குருகுகின்றது; இவர்கின்றது அளவுஇல் காதல்; அன்பினுக்கு அவதி இல்லை; அடைவு என் கொல்? அறிதல் தேற்றேன்'' என்று தன் மன நிலையையும் உணர்ந்து, அவர்கள் எதிரில் சென்று வரவேற்கிறான். அப்படி வரவேற்ற அனுமனைப் பார்த்து, ''நீ யார்?'' என்று இராமன் கேட்கிறான். அக்கேள்விக்கு அனுமன் இறுத்த விடையினை அழகிய இரண்டு பாடல்களில் கம்பன் கூறுவான்.

**''மஞ்சுஎனத் திரண்ட கோல மேனிய!**
**மகளிர்க்கு எல்லாம்**
**நஞ்சுஎனத் தகைய ஆகி, நளிர் இரும்**
**பனிக்குத் தேம்பாக்**
**கஞ்சம்ஒத்து அலர்ந்த செய்ய கண்ண! யான்**
**காற்றின் வேந்தற்கு**
**அஞ்சனை வயிற்றின் வந்தேன்; நாமமும்**
**அனுமன் என்பேன்;**

**'இம்மலை இருந்து வாழும் எரிகதிர்ப் பரிதிச்**
**செல்வன்**
**செம்மலுக்கு ஏவல் செய்வேன்; தேவ! நும்**
**வரவு நோக்கி**
**விம்மல்உற்று அனையான் ஏவ, வினவிய**
**வந்தேன்' என்றான்**
**எம்மலைக் குலமும் தாழ, இசைசுமந்து,**
**எழுந்த தோளான்''**

*(கிட்கிந்தா காண்டம்-அனுமப்படலம்-15, 16)*

அனுமன் இராமனை விளித்து, தான் வாயு தேவனுக்கு அஞ்சனை வயிற்றில் பிறந்தவன் என்றும், தன் பெயர் அனுமன் என்றும் சொல்வதாக முதற்பாடல் அமைந்துள்ளது. அவன் இராமனை விளிக்கும் போதே அவனுடைய மூன்று தனித்தன்மைகளை எடுத்துக் கூறிவிடுகிறான். இப்போதுதான் முதன் முறையாக இராமனைப் பார்க்கும் அனுமன் மனத்தில், அவனுடைய தோற்றமும், தன்னை நோக்கும் அவனுடைய கண்ணும் அழுத்தமாகப் பதிந்துவிடுகின்றன. எனவே, ''நீ மஞ்சு எனத் திரண்ட கோல மேனியன்'' என அவனை வருணிக்கிறான். நீர் கொண்ட காளமேகம் போலத் திரண்ட அழகிய மேனி அவனுடைய மேனி. அம்மேனி, நிறத்தினாலும் குளிர்ச்சியினாலும் கவர்ச்சியினாலும் நீல மேகத்தினை உவமையாகச் சொல்லத் தகுவதாயிற்று. அவனுடைய கண்களோ, கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய கண்கள். அஃதாவது, தாமரையை ஒத்து மலர்ந்திருக்கும் சிவந்த கண்கள். அந்தத் தாமரையோ சாதாரணமான தாமரை அன்று. ஏனென்றால், நாம் காண்கின்ற சாதாரணமான தாமரை, பனிக்குக் குவிந்து பகலவனைக் கண்டு மட்டும் மலர்கின்ற தாமரை. ஆனால், இராமனுடைய கண்களுக்கு ஒப்புமையாகச் சொல்லப் பட்ட தாமரையோ, பனிக்கும் வாடாது, என்றுமே செவ்வி பெற்று மலர்ந்திருக்கும் தாமரை. இதைத்தான், ''நளிர்இரும் பனிக்குத் தேம்பாக் கஞ்சம்ஒத்து'' என்று கூறுகிறான்.

இராமனுடைய இத்தகைய கண்களுக்கு மற்றொரு தன்மையும் இருக்கிறது. அதுதான், ''மகளிர்க்கெல்லாம் நஞ்சுஎனத் தகையவாகி'' இருத்தல். இந்தச் சொற்றொடருக்கு, ''காண்கின்ற பெண்டிர் யாவர்க்கும் வருத்தத்தை உண்டாக்குவதன் காரணமாக, விடம் என்று சொல்லுவதற்கேற்ற தன்மையையுடைய கண்கள்'' என்று பெரும்பாலும் உரை கூறுகிறார்கள். இந்த உரையின்படி, இராமனின் கண்கள், அவனைக் காண்கின்ற பெண்களிடத்தில்

அவன்மாட்டுக் காம உணர்ச்சியை உண்டு பண்ணி, அவனை அடைய ஏக்கம் கொள்ளச் செய்து, அவர்களை வருத்துகின்ற தன்மையன எனப் பொருள்படுகிறது. இப்படிப் பொருள் கொள்வது, இராமனுடைய புனிதத்திற்கும் பவித்திரத்திற்கும் பொருத்தமாக இருக்காது. தன்னைக் காணும் பெண்களின் உள்ளத்தில் எல்லாம் காம உணர்ச்சியை எழுப்புவதாக இருந்தால், அஃது இராமனுடைய தன்மைக் கும் மாட்சிக்கும் களங்கம் விளைவிப்பதாகவே ஆகும். ''இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்'' என்று சீதையைக் கைப்பிடித்த நாள் அவளுக்கு இராமன் செவ் வரம் தந்திருப்பதாகப் பின்னர் அனுமனிடமே சீதை சொல்வாள். இன்னொரு மாதரைச் சிந்தையாலும் இராமன் தொடாமல் இருந் திருக்கவேண்டுமானல், வேறு எந்த மாதரின் மனத்திலும் காம உணர்ச்சியைத் தூண்டி விடாத தன்மையனாக இராமன் இருக்கவேண் டும். இராம காதையில், சூர்ப்பணகை தவிர வேறு எந்தப் பெண்ணும் இராமனிடம் காமம் கொண்டதாக இல்லை. அந்தச் சூர்ப்பணகை கொண்ட காம உணர்ச்சிதான் பின்னர் நிகழ்ந்த எல்லா நிகழ்ச்சிகளுக்கும் காரணமாக அமைந்துவிட்டது. ஆகவே, நளிர் இரும் பனிக்குத் தேம்பா கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய கண்களாக இராமனின் கண்கள் இருந்த போதிலும் அவை, மகளிர் மனத்திலே காம உணர்ச்சி எழாவண்ணம் நஞ்சுபோன்ற தன்மை யுடையனவாக இருந்தன என்றே பொருள் கொள்ள வேண்டும். ஆக, முதன்முதலாக இராமனை விளிக்கும்போதே, அவனுடைய திருமேனிக்கு அழகு, கண்களின் ஒப்பிலாப் பொலிவு, அவற்றின் தனித்தன்மை ஆகிய மூன்று சிறப்புக்களையும் சேர்த்தே விளிக்கிறான்.

இரண்டாவது பாடல், அனுமன், தான் சுக்கிரீவனுக்கு ஏவல் செய்பவன் என்றும், அந்தச் சுக்கிரீவன் இராம இலக்குவருடைய வரவைக் கண்டு கலக்கமடைந்து ஏவியதனல் தெரிந்துபோக வந்ததாகவும் சொல்வதாக அமைந்திருக்கிறது. அனுமனுடைய தோற்ற மும், அவனுடைய மறுமொழியும் இராமனை வெகுவாகக் கவர்ந்துவிடுகின்றன. அவன் தோற்றத்தையும் சொல்லையும் ஆராய்ந்து, அனுமனை நிதானிக்க முற்படுகிறான் இராமன். ''இவனைவிடச் செவ்வியோர் இலர்'' என்றும், ''ஆற்றலும், நிறைவும், கல்வி அமைதியும், அறிவும் என்னும் வேற்றுமை இவனேடு இல்லை யாம்'' என்றும் முடிவுக்கு வந்து, தன் தம்பி யாகிய இலக்குவனிடத்து அனுமனைப்பற்றிச் சில சொல்கிறான். ''இவன் கல்லாத கலையும் வேதக் கடலும் உலகத்து எங்குமில்லையென் பதை இவன் சொல்லே காட்டிற்றல்லவா? யார்கொல் இச்சொல்லின் செல்வன்? பிரம மனே? சிவனே? இவனுடைய படிவம் மாணி யாம் படிவம் அன்று. இவ்வுலகுக் கெல்லாம் ஆணி எனத் தகுபவன். ஆற்றலுக்கு ஏற்ற சேனுயர் பெருமை தன்னைச்சிக்கு அறத்தெளிந் தேன். அதன் உண்மையை நீ பின்னர்க் காண் பாய். இவ்வுலகத்திலுள்ள முனிவர், வான வர் ஆகியவர்களிடையே, இவனையொத்த சொல்திறம் உடையார் யார் உளர்? சுருதி யின் தொகுதி யாவும் முற்றுற அறிந்த இம் மாணியின் மொழிக்கு எதிரே திரிமூர்த்தி களுடைய ஆற்றலும் அரிதாகும்.'' இவையே, இராமன் அனுமனைப்பற்றி எடை போட்டு இலக்குவனிடத்துச் சொன்ன சிலவாகும். பின்னல், அனுமனது பெரிய வானர உருவத் தைக் கண்ட இராமன்,

**''கீழ்ப்படா நின்ற நீக்கி, கிளப்பஅரிது ஆகி, என்றும்**
**நாட்படா மறைக ளாலும், நவைபடா ஞானத் தாலும்**
**கோட்படாப் பதமே, ஐய! குரக்கு உருக் கொண்டது''**

*(கிட்கிந்தா காண்டம்-அனுமப் படலம்-33)*

என்று வியந்துரைக்கின்றான். அத்தோடு நில் லாமல், இந்த அனுமனைப் பெற்றதன் காரண மாகத் தனக்கு நம்பிக்கை பிறப்பதாகவும், தன் னுடைய துன்பமெல்லாம் தீர்ந்து தான் இன்பம் எய்திவிட்டதாகவும் சொல்கிறான்.

**''நல்லன நிமித்தம் பெற்றேம்; நம்பியைப் பெற்றேம், நம்பால்**
**இல்லையே, துன்பம் ஆனது, இன்பமும் எய்திற்று.''**

*(கிட்கிந்தா காண்டம்-அனுமப் படலம்-34)*

என்று சொல்கிறான். ஆக, முதற்சந்திப்பி லேயே, இராமன் அனுமனை, ஒப்பற்ற ஆற்றல் பெற்றவனாகவும், கலைக்களஞ்சியமாகவும், வேதக் கடலாகவும், அறிவின் ஊற்றாகவும், சிறந்த ஞானியாகவும், சொல்லின் செல்வனாக வும், ஒப்பாரும் மிக்காருமற்ற செவ்வியோ னாகவும் கணித்து, அவனிடத்து எல்லையில்லா நம்பிக்கையும் அன்பும் வைத்துவிடுகிறான்.

அவனைப் பெற்றமையினல் தன் துன்பங்க ளெல்லாம் தீர்ந்துவிட்டன என்றும், தனக்கு இன்பம் வந்துற்றதாகவும் எண்ணிவிடுகிருன்.

இந்த நம்பிக்கைதான், பின்னர் வானர வீரர்கள் சீதையைத் தேடிப் பல திசைகளிலும் சென்றபோது, தென் திசைக்குச் செல்லவிருந்த அனுமனைத் தனியே அழைத்துச் சென்று, சீதை யின் அங்க அடையாளங்களைக் கூறித் தன் மோதிரத்தையும் அளித்து, ''அறிஞ !இனிதின் ஏகுதி. நின் வினையெலாம் முடிக !'' என்று விடைகொடுத்து அனுப்புமளவுக்கு இராமனைச் இட்டுச்செல்கிறது. இராமனுடைய இந்தச் செயல், அவன் அனுமனுடைய திறமையில் வைத் திருந்த மதிப்பையும், அவனுல்தான் சீதையைக் கண்டு திரும்ப முடியும் எனக்கொண்டிருந்த நம்பிக்கையையும் நன்ருகக் காட்டுகிறது.

இலங்கைக்குச் சென்று, சீதையைக் கண்டு, திரும்பி வந்த அனுமன் அதனை முதலில் இராம னுக்குக் குறிப்பினுல் உணர்த்துகிருன். பின்னர், தான் கண்டுவந்த சீதையைப் பற்றியும் அவ ளுடைய கற்பு நிலையைப்பற்றியும் விரிவாகப் பேசுகிருன். சீதை உயிருடனிருக்கிருள் என் பதையும், அவள் கற்புடனிருக்கிருள் என்பதை யும் தெரிந்த இராமன் மகிழ்ச்சியடைகிருன். ஆனுல், அனுமனைப் பற்றி அதிகமாக எதுவும் பேசவில்லை. இலங்கையில் நிகழ்ந்தவற்றை யெல்லாம் இராமனிடம் சொன்ன அனுமன், தற்புகழ்ச்சியாகுமே என்று, தான் புரிந்த வீரச் செயல்கள் எதையுமே சொல்லவில்லை என்ரு லும், வீடணன் அடைக்கலத்திற்குப் பிறகு, வீடணன் வாயிலாக அனுமனின் வீரச் செயல் களைப் பற்றி இராமன் கேள்வியுறுகிருன். இராமனிடம் அவற்றைச் சொல்லியதோடு அமையாமல், வீடணன், ''கரன் முதலிய வீர ரும் வாலியும் உன்னுல் மடிந்தது கேட்டு நான் இங்கு அடைக்கலம் புகவில்லை. அனுமன் இலங்கையை எரித்ததையும் அரக்கர்களை அழித்ததையும் கண்ணுரக் கண்டதாலேயே இங்கு வந்து சேர்ந்தேன்'' என்றும் சொல் கிருன். இதனைக் கேட்டு, தான் சீதையைப் பிரிந்ததால் மெலிந்திருந்த தன் தோள்கள் விம்முற, தன் தூதனுகிய அனுமனைப் பார்த்து இராமன், ''பெருந்திரளாகத் திரண்டிருக்கும் பகைவரின் படையில் பாதிக்குமேல் நீ கொன் ருெழித்தாய். இலங்கையை எரியூட்டினுய் என்றவிடத்து இனி அங்கே நான் போய்ச் செய்ய வேண்டுவது என்ன இருக்கிறது ? நான் வீடணனிடமிருந்து கேட்டதிலிருந்து, சீதை யைக் கண்டும், நீ அவளை மீட்டு வராதது நான் என் விற்ருெழில் காட்டுவதற்காகப் போலும். நீ தனியாகச் செய்த வீரச் செயல் களை நோக்குமிடத்து, இனி நாம் இலங்கைக்குச் சென்று செய்யப் போகின்ற செயல் மிகச் சிறிதே ஆகும். அதனுல் எமக்கு என்ன புகழ் உண்டாகப் போகிறது ? என்னதாக்கிய வலி யொடு அவ்விராவணன் வலியும் உன்னுடைய வீரச் செயலால் உன்னதாக்கிவிட்டாய்'' என்று அனுமனைப் புகழ்ந்து, ''பாக்கியம் உருக் கொண்டது ஒப்பாய்!'' என்றுஅனுமனைவிளித்து, ''முன்னது ஆக்கிய மூவுலகு ஆக்கிய முத லோன் பின்னது ஆக்கிய பதம் நினக்கு ஆக்கி னென் ; பெற்ருய்'' என்று பரம பதத்தையே அனுமனுக்கு அளித்துவிடுகிருன்.

இந்திரசித்து இறந்த பிறகு, இராம இலக்கு வரை முற்பட வெல்லுமாறு சேனைத் தலைவர் களுக்கு இராவணன் கூறி, அதற்கு உதவியாக உடன் செல்ல மூலபலச் சேனைக்கு உத்தரவிடு கிருன். மூல பலச் சேனை போருக்குத் திரண் டெழுகிறது. குவலயம் முழுதும் தழுவி விண்ணையும் திசையையும் தடவும் அந்த மூல பலப் படையைக் கண்டு வானரங்கள் அஞ்சி ஓடுகின்றன. ''இக்கொடும் படை எங்கு உளது ? இயம்புதி'' என்று இராமன் வீடண னிடம் வினவுகிருன். வீடணன் மூலபலப் படையைப் பற்றி விவரித்துக் கூற, அதனைக் கேட்ட அண்ணல் முறுவலும் சீற்றமும் கிளர, ''காட்டுகின்றனன், காணுதி ஒருகணத்து'' என்று வீடணனுக்கு உரைத்து, ஓடிய வானர வீரரைப் பயம் துடைத்து மீட்டு வருமாறு அங் கதனை ஏவுகிருன். படைத் தலைவர்கள் மட் டுமே நின்று தாம் ஓடியதற்கு உற்ற கார ணத்தை அங்கதனிடத்தில் உரைக்கின்றனர். மூலபலப் படையினுடைய அளவையும், தன்மையையும் கண்டு வானர சேனை பயந் ததை எடுத்துக் கூறிய சாம்பவான், ''இறுதி யாகச் சாவதாக இருந்தாலும் போருக்கு அஞ்சி ஓடியது அழகியதன்று ; பழியை விளைக்கும், நரகிடைத் தள்ளும் ; ஆகவே, மீளச் செல் வோம்'' என்று சொல்லிய போதிலும், 'அப்படி மீளச் சென்று இராமனுடைய கண் முன்னே எங்ஙனம் வீழ்ந்து நிற்போம்' என்று நாணு கிருன். அந்த நாணத்தைப் போக்க அங்கதன் கூறிய சமாதானங்களை ஏற்று வானர சேனை திரும்பி வருகிறது. அப்பொழுது இராமன்,

அந்த மூலபலச் சேனை முழுவதையும் தானே சென்று அழிப்பதாகவும், தன் தம்பியாகிய இலக்குவன் மாருதியுடனும், சுக்கிரீவனுடனும் சென்று வானர சேனையை அரக்கர் நெருங்கா வண்ணம் காத்திட வேண்டுமென்றும் சொல்கிறான். இலக்குவனும் அதற்கு ஒருப்பட்டுச் செல்கிறான். ஆனால், அனுமன் மாத்திரம் இராமனிடம் சென்று ''எந்தாய்! புன்தொழில் குரங்கு என்று எண்ணாது நீ என் தோளின் மேல் ஏறிப் போர் செய்தால் நன்று என நினைக்கிறேன். அப்படி இல்லாவிட்டாலும், ''நாயினேன் உன் பின்னே தனியே நின்றபோதும் என் அடிமையில் பிழைப்பு இல்'' என்கிறான். அதற்கு இராமன் கூறும் பதில் அனுமனைப் பற்றி இராமன் கொண்டுள்ள கருத்தினை நன்றாகப் புலப்படுத்துகிறது. இராமன் அனுமனிடத்து, ''ஐய! நிற்கு இயலாதது உண்டோ? இராவணன் அயலே வந்துற்று இலக்குவன் தன்னோடு பொருதால், உன்துணை இல்லாவிட்டால் வெற்றி உண்டாகுமா? வானர சேனை சிதையுமல்லவா? முன்னர் இந்திரசித்தோடு பொருவதற்காக இலக்குவனை அனுப்பியபோது யாரை நம்பி அனுப்பினேன்? உன்னை நம்பியல்லவா? அன்று அவன் வென்றதும் உன்னாலல்லவா? வீரர்க்கு வீர! இன்றும் நின்னைப் பிரியாமலிருந்தால் அவன் வெல்வான்'' என்று கூறி, மேலும் தொடர்ந்து சொல்கின்ற அடியிற் காணும் சொற்கள் மயிர்க்கூச்செறியச் செய்யக் கூடியவை.

**''சேனையைக் காத்து, எற்பின்னே திருநகர்**
**தீர்ந்து போந்த**
**யானையைக் காத்து, மற்றை இறைவனைக்**
**காத்து எண் தீர்ந்த**
**வானைஇத் தலத்தி னோடும் மறையொடும்**
**வளர்த்தி''**

*(யுத்த காண்டம்-மூலபல வதைபடலம்-66)*

என்று கூறுகிறான். இராமனுடைய கருத்தின்படி அனுமன்தான் வானர சேனையைக் காக்கக் கூடியவன்; இலக்குவனைக் காக்கக்கூடியவன்; சுக்கிரீவனைக்காக்கக்கூடியவன்; வானுலகத்தைப் பூவுலகத்தோடும் மறையோடும் வளரச்செய்யக் கூடியவன். எத்தகைய பாராட்டு!

இந்திரசித்து விடுத்த பிரம்மாத்திரத்தினால் இலக்குவன் முதலியோர் வீழ்ந்து கிடக்கின்றனர். வேறிடத்திலிருந்த இராமன், போர்க்களம் புகுந்து, சுக்கிரீவன், அனுமன் முதலியோரின் நிலைமை கண்டு நொந்து புலம்புகிறான். கடைசியாக இலக்குவனையும் காண்கிறான். தன் தம்பியின் நிலையினை எண்ணி, அளவு கடந்த துயரத்தில் மூழ்கி, அழுது அரற்றுகிறான். அந்நிலையிலேயே அயர்ந்து சோர்ந்து துயின்றுவிடுகிறான். இந்தக் கட்டத்தில்தான், சீதையை விமானத்தில் ஏற்றி இராவணன் போர்க்களத்திற்கு அனுப்புகிறான். அரக்கியர் சீதையை விமானத்திலிட்டு அழைத்துக்கொண்டு போன பிறகு, உணவு கொண்டுவந்து பாசறையில் சேர்த்த வீடணன் போர்க்களத்திற்கு வருகிறான். ஆய்ந்து, இராமன் மேனியில் வடுவின்மையை உணர்ந்து நடுக்கம் தீர்கிறான். பிரம்மாத்திரத்தினால் நிகழ்ந்தது இது என உணர்ந்த வீடணன், அதனைத் தீர்க்கும் உபாயத்தை ஆராய்கிறான். 'இறவாதவர் யாரேனும் உளரோ?' எனக் கொள்ளியொன்றைப் பற்றிக்கொண்டு சென்று தேடுகிறான். அனுமனைக் கண்டு, அவன் உடலில் தைத்த அம்புகளை நீக்கி, நீர் தெளித்து, மயக்கம் தெளிவிக்கிறான். பின்னர், இருவரும் சாம்பவானைத் தேடிச் சென்று அடைகின்றனர். சாம்பவானுடையஆலோசனைப்படிஅனுமன்சென்று, விடிவதற்குள் மருத்துமலையைக் கொண்டுவருகிறான். அம்மலையினின்று வந்த காற்றுப்பட்டவுடனேயே அனைவரும் உயிர்த்து எழுகின்றனர். அப்பொழுது, துயரம் முற்றும் அற, தூய காதல் நீர் துளங்கு கண்ணினனாகிய இராமன், தாயின் அன்பனாகிய அனுமனைத் தழுவுகிறான். அப்படித் தழுவிய இராமனுடைய பாதங்களைப் பணிந்து நிற்கிறான் அனுமன். அவ்வனுமனைப் பாராட்டுமுகத்தான் இராமன் சில சொல்கிறான். ''நாங்கள் முன்பு தசரத மன்னனுடைய புதல்வர்களாகப் பிறந்திருந்தோம். பின்னர் மாண்டு போயினோம். இப்போது நின்னிற்றோன்றினோம். உயிர் போகின்ற காலத்தில் செய்கின்ற உதவிக்கு அந்த உயிரையே பதிலுக்குக் கொடுத்தாலும் ஈடு செய்தது ஆகுமோ?

**''பழியும் காத்து, அரும் பகையும் காத்து,**
**எமை**
**வழியும் காத்து, நம் மரபும் காத்தனை''**

*(யுத்த காண்டம்-மருத்து மலைப்படலம்-111)*

**''இவ்வுதவியை நீ செய்திலையேல் ஏழு**
**உலகங்களும்**
**மடிந்திருக்கும்.''**

*(யுத்த காண்டம்-மருத்து மலைப்படலம்-112)*

**"..............................எவரும் எம்மோடு**
**நின்று வாழுமா நெடிது நல்கினுய்**
**ஒன்றும் இன்னல் நோய் உறுகிலாது, நீ**
**என்றும் வாழ்தியால் இனிது, என் ஏவலால்"**
*(யுத்த காண்டம்-மருத்து மலேப்படலம்-113)*

மூலபலப்படை முழுதும் மடிந்து போன பிறகு சேனைகள் புடைசூழ இராவணன் தேரேறிப் போர்க்களத்திற்குச் செல்கிருன். இலக்குவனேடு எதிரிட்டுப் பொருகின்ற இராவணன், இலக்குவனுடைய வலிமையைக் கண்டு, தன்னுடைய படைகளெல்லாம் வலிவு இழந்ததை உணர்ந்து, பிரமனுல் படைக்கப்பட்ட, சிவனேயும் அழிக்கவல்லதாகிய மோகப்படையை இலக்குவன்மேல் விடுகிருன். அதைக் கண்ட வீடணன் அந்த மோகப் படையைத் திருமாலின் படையைக்கொண்டு அறுக்குமாறு யோசனே கூற, அந்த யோசனேப்படியே இலக்குவன் செய்கிருன். மாலின் படை மோகப் படையினே அழிக்கிறது. வீடணன் ஆலோசனேயினுல் தன் படை அழிவுறுவதைக் கண்ட இராவணன் கடும் சினம் கொண்டு, அவனேக் கொல்லும்பொருட்டு, மயன் கொடுத்த வேலினே அவன்மீது எறிகிருன். அஃது எப்படிப் பட்ட வேல் என்ருல்,

**"விட்ட போதினின் ஒருவனே வீட்டியே மீளும்**
**பட்ட போதுஅவன் நான்முகன் ஆயினும்**
**படுக்கும்"**
*(யுத்த காண்டம் - வேல் ஏற்ற படலம்-27)*

அந்த வேலின் வலிமையை நன்கு உணர்ந்திருந்த வீடணன், "இப்படை என் உயிரை அழிக்கும். இதனின்றும் தப்புமாறு செய்யக் கூடியது எதுவுமில்லே" என்கிருன். அதைக் கேட்ட இலக்குவன், "யான் இதைப் போக்குவேன். நீ அஞ்சாதே" என்று கூறி, அவ்வேலினேத் தடுக்கப் பல அம்புகளே எய்கிருன். ஆனுல், அவையனேத்தும் அவ்வேலின் முன்னே செயலற்றுப் போகின்றன. உடனே இலக்குவன், "நான் இப்பொழுது தோற்ருலும் புகழ் நிற்கும் ; தருமமும் தொடரும் ; ஆர்ப்பர் நல்லவர் ; அடைக்கலம் புகுந்தவன் அழியப் பார்த்துக்கொண்டிருக்கலாமோ? அடைக்கலம் புகுந்தவனேக் காக்கத் தவறிவிட்டோமென்ற நெடும்பழி வந்து தொடர்வதன் முன்னம் இந்த வேலினே என் மார்பினில் ஏற்பேன்!' என்று அவ்வேலினே ஏற்க இலக்குவன் வீடணனுக்கு முன் செல்கிருன். இலக்குவனுக்கு முன்னுல் வீடணன் புகுகிருன். இருவரையும் விலக்கி அங்கதன் முன்னுல் செல்கிருன். அவனேயும் விலக்கிச் சுக்கிரீவன் முன்னுல் செல்கிருன். அவனேயும் விலக்கி அனுமன் விரைகிருன். "நீங்கள் எல்லோரும் நில்லுங்கள். இதை நான் விலக்குவேன்" என்று சொல்லிக்கொண்டு, முன்னின்ருர் எல்லாரும் பின்னுறக் காற்றினும் கடுகிச் சென்று, தன்னுடைய முதுகினிடத்து ஊடுருவிச் செல்லுமாறு இலக்குவன் அந்த வேலினேத் தன் மார்பிலேயே ஏற்கிருன். இலக்குவன் இறந்ததைக் கண்ணுற்ற இராவணன், தனக்கு வெற்றி கிட்டிவிட்டதாக எண்ணி, இனி வீடணனேக் கொன்று என்ன பயன் என்ற எண்ணத்துடன் போர்க்களத்தினின்றும் மீள்கிருன். வீடணன் துயரம் மிக்கவனுய் இலக்குவனின் பாதத்தில் வீழ்ந்து, "இவன் உயிர் துறக்க இராமனும் வாழான்; நானும் வாழேன்" என்று இறக்க முயல்கிருன். அதனேத் தடுத்த சாம்பவான் கூறுகிருன்.

**"அனுமன் நிற்க,நாம் ஆர்உயிர்க்கு இரங்கு**
**வது அறிவோ ?**
**நினேயும் அத்துணே மாத்திரத்து உலகுஎலாம்**
**நிமிர்வான் ;**
**வினேயின் நல்மருந்து அளிக்கின்ருன் ;**
**உயிர்க்கின்ருன், வீரன் ;**
**தினேயும் அல்லல் உற்று அழுங்கன்மின்!"**
*(யுத்த காண்டம்-வேல் ஏற்ற படலம்-39)*

அனுமனுடைய வீரத்தையும் திறமையையும் இராமன் பாராட்டியதை முன்பு கண்டோம். இப்போது சாம்பவான் பாராட்டுவதைப் பார்க்கிருேம். சாம்பவான் உரைப்படி, அனுமன் சென்று மருந்துமலேயைக் கொண்டுவர, அதன் காற்றுப் பட்டவுடனேயே இலக்குவன் உயிர் பெற்று எழுகிருன். எழுந்த இலக்குவன் அனுமனேத் தழுவி, வீடணன் நலமுடனிருக்கிருன் என்பதையறிந்து உவகையடைகிருன். பிறகு, எல்லோரும் சென்று, இராமனே அடைந்து, வணங்குகின்றனர். "விளேந்தது என்ன ?" என்று வினவிய இராமனுக்கு நடந்தவை அனேத்தையும் சாம்பவான் உரைக்கிருன். அதனேக் கேட்ட இராமன் அனுமனேத் "தொடரப் புல்லி"

**"பெற்றனென் உன்னே; என்னே பெருதன ?**
**பெரியோய் ! என்று j**
**அற்று இடையூறு செல்லா ஆயுளே ஆதி !"**
*(யுத்த காண்டம்—வேல் ஏற்ற படலம்-46)*

என்றும் வாழ்த்துகிருன்.

இந்திரசித்து விடுத்த பிரம்மாத்திரத்தினுல் வீழ்ந்துகிடந்த இலக்குவனை மருத்து மலையைக் கொண்டுவந்து உயிர்ப்பித்த அனுமனை இராமன் தழுவிக்கொண்டு ஆசி கூறுகிருன் என்பதை முன்னர்ப் பார்த்தோம். இப்போது இரண்டாவது முறையாக வல்லவா இலக்குவனுக்கு அனுமன் உயிர் கொடுத்திருக்கிருன்? ஆகையால், அனுமனிடத்து இராமன் கொண்டிருந்த அன்பும் நன்றியும் மிகுதிப்பட, அதன் காரணமாக அனுமனை இடைவிடாது திரும்பத் திரும்பத் தழுவிக்கொள்கிருன். இந்தச் செயலைக் கவிச்சக்கரவர்த்தி, ''தொடரப்புல்லி'' என்ற சொல்லாட்சியினுலே உணர்த்துவான்.

இராவண வதத்திற்குப் பின்னுல், சீதையை மீட்டுக்கொண்டு எல்லோரும் அயோத்திக்குத் திரும்புகிருர்கள். வழியிலே பரத்துவாச முனிவனது ஆச்சிரமத்தில் இராமனுடையகட்டளைப் படி புட்பக விமானம் இறங்குகிறது. இராமன் முதலியோர் முனிவனைத் தொழ, முனிவன் அவர்களை உபசரிக்கிருன். அங்குத் தங்கியிருந்த இராமன், அயோத்திக்கு முன்னதாகவே சென்று பரதனிடத்துச் செய்தி சொல்லுமாறு அனுமனைப் பணித்துத் தன் மோதிரத்தையும் அவனிடத்துக் கொடுத்தனுப்புகிருன். இப்படி அனுமன் வருவதற்கு முன்னுல், 'பதினுன்காண்டுகள் கழித்து இராமன் வந்திலனே' என்ற துயரம் தாளாமல் தீயில் வீழ்ந்து உயிர் துறக்கத் தீர்மானிக்கிருன் பரதன். செய்தியறிந்த கோசலை விரைந்தோடி வந்து, பலப்பல சொல்லிப் பரதன் தன் உயிரை மாய்த்துக்கொள்ளாமல் தடுக்க முயல்கிருள். பரதன் கோசலையின் சொல்லை மறுத்து, தீயினை அடுத்து அவ்வக்கினிக்குப் பூசை செய்கிற வேளையில், திடீரென அங்கே குதிக்கிருன் அனுமன். அப்படி வந்து குதித்த அனுமன், இராமனது வருகையைப் பரதனுக்குத் தெரிவித்து, ''உன் உயிர் ஒழிந்தால் அவ்விராமன் உயிர் வாழ்வானே?'' என்று பரதனுக்குச் சொல்லித் தன் கையினுல் எரியைக் கரியாக்குகிருன். பின்னர், பரதனுடைய மலர்த் தாள்களையும் வணங்கி, ''இராமன் கொடுத்த வாக்கின்படி பதினுன்கு ஆண்டுகள் முடிய இன்னும் நாற்பது நாழிகை மீதமிருக்கிறது. நான் இப்படிச் சொல்வது உண்மையன்றென்ருல், நாயைப் போல் கடையனுன அடியேன் உனக்கு முன் இந்த எரியிடை வீழ்ந்து மாள்வேன். அந்தக் காலம்வரை நீ பொறுத்திரு. அதற்குள் இராமன் வரவில்லையெனில் நீ நினைத்தபடி செய்யலாம்'' என்று கூறி, இராமனது மோதிரத்தை அடையாளமாகக் காட்டுகிருன். அதனைக் கண்டு மகிழ்ச்சியுற்ற பரதன், அனுமனைக் கொண்டாடி, ''நீ யார்?'' என்று வினவுகிருன். அனுமன் தன் வரலாற்றினைக் கூறித் தன் பெருவடிவைக் காட்டுகிருன். அதைக் கண்டவர்கள் அதிசயமும் அச்சமும் கொள்ள, அவ்வடிவைச் சுருக்கிக் கொள்ளுமாறு பரதன் அனுமனை வேண்டுகிருன். அனுமனுக்குப் பரிசு கொடுத்து, இராமனை எதிர்கொள்ளும்படி அயோத்தியிலுள்ளார்க்கு முரசறைவிக்கச் சத்துருக்கனைப் பரதன் ஏவுகிருன். எல்லோரும் மகிழ்ச்சியடைகிருர்கள். இந்த நிலையில், புட்பக விமானம் அயோத்திக்குமேல் வருகிறது. அனுமன் இராமபிரானை எதிர்சென்று வணங்கி, அயோத்தியின் செய்தியைச் சொல்கிருன். அப்பொழுது இராமன் அனுமனை ''இறுகப்புல்லி'' சில சொல்கிருன்.

**''தீவினை யாம்பல செய்ய, தீர்வு இலா**
**வீவினை முறைமுறை விளைவ, மெய்ம்மை யாய்!**
**நீஅவை துடைத்து நின்று, அழிக்க நேர்ந்த தனை;**
**ஆயினும் அன்பினுல் யாம்செய் மாதவம்''**

*(கம்பராமாயணம், வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் உரை, யுத்த காண்டம் - மீட்சிப்படலம் - 330)*

மேற்கண்டவாறு சொன்னதோடமையாமல், இராமன் மற்ருென்றும் சொல்கிருன். 'என்னை ஈன்ற தாயாகிய கோசலைக்கும், என்னைப் பெற்ற தந்தையாகிய தசரதனுக்கும் என் இன்துணைத் தம்பியாகிய இலக்குவனுக்கும் உனக்கும் நான் என்ன சொல்லக் கிடக்கிறது?'' என்றே அனுமனிடத்தில் கூறிவிடுகிருன்.

**''ஒன்று உரைத்து இறுப்பது என், உனக்கும், எந்தைக்கும்,**
**இன்துணைத் தம்பிக்கும், யாய்க்கும்?''**

*(கம்பராமாயணம், வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் உரை, யுத்த காண்டம் - மீட்சிப்படலம் - 331)*

இங்கு இரண்டு அருமைகளைக் காணலாம். ஒன்று, இராமனுடைய தாய், தந்தை, தம்பியர் வரிசையில் அனுமன் இடம் பெற்றுவிடுகிருன் என்பது. மற்ருென்று, இராமன் அனுமனை இறுகத் தழுவிக்கொள்கிருன் என்

பது. முதன்முறையாக இலக்குவனை உயிர்ப்பித்தபோது இராமன் அனுமனை வெறுமனே தழுவிக்கொண்டான். மறுமுறையும் உயிர்ப்பித்தபோது இராமன் அனுமனைத் தொடரப் புல்லினன். இப்போது, பரதன் தீயில் வீழ்ந்து உயிரை மாய்த்துக்கொள்ளத் துணிந்த வேளையில் அவனைத் தடுத்து அவன் சாகாவண்ணம் காத்த அனுமனை இராமன் இறுகத் தழுவிக் கொள்கிறான். தொடரப் புல்லுதலுக்கும் இறுகத் தழுவுதலுக்கும் வேற்றுமை இருக்கிறது. திரும்பத் திரும்பத் தழுவிக்கொள்ளும்போது ஒவ்வொரு தழுவுதலிலும் இறுக்கம் இருக்காது. இப்போதோ ஒரே தழுவல். அதுவும் இறுக்கம் நிறைந்த தழுவல். ஆகவே, அனுமனை இராமன் தழுவிக்கொள்ளும் தன்மை படிப்படியாக உயர்ந்துகொண்டே போவதைப் பார்க்கிறோம்.

அயோத்திக்கு அனைவரும் திரும்பி வந்த பிறகு, இராமனுக்கு முடி சூட்டு விழா நடக்கிறது. அந்நிகழ்ச்சிக்குச் சில காலத்திற்குப் பிறகு, உடன்வந்த வர்களுக்கெல்லாம் இராமன் விடை கொடுத்து அனுப்புகிறான். குகன், சுக்கிரீவன், வீடணன், அங்கதன் முதலான ஒவ்வொருவருக்கும் அவரவர்க்கேற்ற பரிசும் அளித்து அனுப்புகிறான். இறுதியில் அனுமனுக்கு விடை கொடுக்கும் கட்டம் வருகிறது. அப்பொழுது இராமன் ஒன்று சொல்லி, ஒன்று செய்கிறான். மகிழ்ச்சியுடனும் இனிமையுடனும் அருளொழுக அனுமனை நோக்கி, ''உதவி செய்வதற்கு உன்னையொத்தவர் நீயலால் வேறு யார் இருக்கிறார்கள்? அன்று நீ செய்த பேருதவிக்கு யான் செய்யக்கூடிய செயல் வேறு எதுவுமில்லை. போரில் உதவிய பைம்பூண் அணிந்த உன்னுடைய தோள்களால் என்னை நீ பொருந்துறப் புல்லுக'' என்று அனுமனிடம் கூறி, தன்னைத் தழுவிக்கொள்ளுமாறு அவனிடம் சொல்கிறான்.

**''மாருதி தன்னை ஐயன் மகிழ்ந்து, இனிது**
**அருளின் நோக்கி,**
**ஆர் உதவிடுதற்கு ஒத்தார், நீ அலால்?**
**அன்று செய்த**
**பேர் உதவிக்கு யான் செய் செயல் பிறிது**
**இல்லை; பைம்பூண்**
**போர் உதவிய திண்தோளால் பொருந்துறப்**
**புல்லுக!'' என்றான்.**

(வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் உரை, யுத்த காண்டம்-விடை கொடுத்த படலம் - 20)

இப்போது அனுமனை இராமன் நோக்கிய நோக்கிலே மகிழ்ச்சி, இனிமை, அருள் மூன்றும் நிறைந்து நிற்கின்றன. 'உதவி செய்வதில் அனுமனுக்கு நிகர் அனுமனே; அனுமன் செய்த உதவிகளை அனுமனையல்லால் வேறெவரும் செய்திருக்க முடியாது' என்பதை இப்போது இராமன் தெரிவித்துக்கொள்கிறான். அனுமன் செய்த உதவிக்குத் தான் செய்யக்கூடிய செயல் எதுவுமில்லை என்ற தன்னுடைய இயலாமையையும் தெரிவித்துக்கொள்கிறான். என்றாலும், தான் செய்யக்கூடியது ஒன்று இருக்கிறது. தன்னையே பொருந்தப் புல்லுமாறு அனுமனைக் கேட்டுக்கொள்ளுதலே ஆகும். இதில் பல அருமைகள் மண்டிக் கிடக்கின்றன. அனுமன் செய்த உதவிகளை நாம் முன்னர்ப் பார்த்தோம். அவன், அசோக வனத்தில் தற்கொலை செய்துகொள்ள முற்பட்ட சீதையை அந்தத் தற்கொலையினின்றும் தடுத்து, அவள் உயிரைக் காப்பாற்றியிருக்கிறான். இருமுறை இலக்குவனுடைய போன உயிரை மீட்டுக் கொடுத்திருக்கிறான். இப்படிச் செய்ததன் மூலம் இராமனுடைய உயிரையும் காப்பாற்றியிருக்கிறான். இலக்குவன் உயிர் பெற்றிராவிடில் இராமன் உயிரை விடுவது திண்ணமன்றோ? பிரம்மாத்திரத்தினால் தாக்குண்ட இலக்குவனை உயிர்ப்பிப்பதற்காக மருத்து மலையைக் கொணர அனுமனை அனுப்பும்போது சாம்பவான் இதையே சொல்கிறான். பின்னர் இலக்குவன் உயிர் பிழைத்தவுடன் இராமனும் இதையே சொல்கிறான். இராவணனுடைய வேலினை ஏற்று மாண்டு கிடந்த இலக்குவனைப் பார்த்து, வீடணனும் இதைத்தான் சொல்கிறான். ஆக, நாடு விட்டுக் காடு சென்ற மூவருடைய உயிரையும் காப்பாற்றி, அவர்கள் அயோத்திக்குத் திரும்பிச் செல்ல உதவியவன் அனுமன்தான். அதுமட்டுமன்றி, பரதனுடைய உயிரையும் அவன் காப்பாற்றுகிறான். இத்தகைய உதவிகளை அனுமனைத் தவிர வேறு யாரும் செய்திருக்க முடியாது என்றும், அத்தகைய உதவிக்கு ஈடாகத் தான் செய்யக்கூடிய செயல் எதுவுமில்லையென்றும் இராமன் கூறுவது சிறிதும் மிகையாகாது.

அடுத்துக் காணக்கூடிய அருமை, இதுவரையில் அனுமனைத் தழுவிக்கொண்ட இராமன், இப்போது தன்னைத் தழுவிக்கொள்ளுமாறு அனுமனைக் கேட்பது ஆகும். அனுமனை

இராமன் தழுவிக்கொள்ளும் தன்மை, வெறும் தழுவலில் தொடங்கி, தொடரப் புல்லுதலாக வளர்ந்து, இறுகத் தழுவுதலாகச் சிறந்து நின்றது. இப்போதோ, இராமன் அனுமனை, எடுத்த எடுப்பிலேயே ''பொருந்துறப் புல்லுக'' என்று கேட்கிறான். காரணம், இஃது இராமன் அனுமனுக்கு விடை கொடுக்கிற கட்டம். எனவே, இந்தக் கட்டத்தில் நிகழ்கிற இத்தழுவலே ''பொருந்துறப் புல்லுதலாக'' அமைவது பொருத்தமேயாகும்.

மூன்றாவதாக அமைகிற அருமையைப் பார்ப்போம். 'இதுகாறும் தானே சென்று அனுமனைத் தழுவிக்கொண்ட இராமன், இப்போது தன்னைத் தழுவிக்கொள்ளுமாறு அனுமனைக் கேட்பது ஏன்? தானே அனுமனைப் பொருந்துறப் புல்லியிருந்தால் பொருத்தமாக இருந்திராதோ?' என்ற ஐயம் எழக்கூடும். இங்கேதான் கவிஞன் ஓர் அற்புதமான மனோதத்துவப் பண்பையும் தலைசிறந்த தத்துவக் கருத்து ஒன்றையும் அமைத்துவிடுகிறான். ஒன்றைத் தழுவிக்கொள்பவனுடைய மனோநிலை, தான் தழுவிக்கொள்வது தனக்கு உடைமைப் பொருள் என்ற அடிப்படையிலேயே அமைந்திருக்கும். அஃதாவது, தழுவிக்கொள்ளப்படுவது தழுவிக்கொள்பவனுடைய உடைமை என்ற உறவின் அடிப்படையில்தான் இந்த மன நிலை அமைகிறது. ஒரு தாய் தன் குழந்தையைத் தழுவிக்கொள்ளும்போதும், ஒரு காதலன் தன் காதலியைத் தழுவிக்கொள்ளும்போதும் இந்த மனநிலையே முன்னிற்கிறது. ஆகவே, அனுமனை இராமன் தழுவிக்கொண்டபோதெல்லாம், அனுமனைத் தனக்கு உடையவன் என்றே இராமன் கருதினான். இப்போதோ விடை கொடுக்கிற கட்டம். தான் அனுமனுக்குச் செய்ய வேண்டிய கைம்மாற்றையெல்லாம் இப்போதே தான் செய்தாக வேண்டும். அனுமனுடைய உதவிக்கெல்லாம் கைம்மாறாகச் செய்யக்கூடிய ஒன்று இருக்குமானால், அது ஒன்றே ஒன்றாகத்தான் இருக்க முடியும். அந்த ஒன்று, அனுமனுடைய உதவிகளை எல்லாம் பெற்ற இராமன், அந்த உதவி எல்லாவற்றையும் செய்த அனுமனுக்குத் தன்னையே உடைமையாக்கிவிடுவதுதான். ''என்னைப் பொருந்துறப் புல்லுக'' என்று அனுமனிடம் சொல்லும் இராமன், இவ்வாறு தன்னையே அனுமனுக்கு உடைமையாக்கிவிடுகிறான். ''பொருந்துறப் புல்லுக'' என்ற சொல்லாட்சியில் அமைந்துள்ள ''பொருந்துற'' என்ற சொல்லும் இதனையே வலியுறுத்தும்.

நான்காவதாகச் சொல்லத்தக்க அருமை, இராமனைக் கடவுளாகக் கொள்பவர்களுக்கு ஏற்புடைய தத்துவக் கருத்து ஒன்றும் இதில் அமைந்திருப்பது ஆகும். தன்னை இறைவனுக்குத் தொண்டனாக அர்ப்பணித்துக்கொள்கிற பக்தனிடத்தில், இறைவனும் தன்னை அந்த பக்தனின் தொண்டனாக அர்ப்பணித்துவிடுகிறான். இராமனுடைய தாசனாக, அவனுடைய தொண்டில் தன்னை ஈடுபடுத்திக்கொண்ட அனுமனுக்குத் தன்னையே உடைமையாக்கி, இராமன் தன்னை அர்ப்பணித்துக்கொள்வது பொருத்தமேயாகும். இந்தப் பாட்டில் கவிஞன் கூறுகின்ற கருத்தினை, அவனுடைய மற்றொரு பாட்டோடு சேர்த்துப் பார்க்கும்போது, இந்தத் தத்துவக் கருத்துத் தெற்றென விளங்கும். மறைந்து நின்று இராமன் வாலியின்மீது அம்பு எய்கிறான். அது வாலியின் மார்பில் தைக்கிறது. அந்த அம்பினை வெளியே உருவ வாலி முயல்கிறான். தன் கால்களாலும் வாலினாலும் முயன்று மார்பினின்றும் அம்பைப் பறிக்கிறான். அப்படிப் பறித்தபோது, அதில் இராமனுடைய நாமம் பொறித்திருப்பதைக் கண்ணுறுகிறான். அந்த இராமனைப் பற்றிக் குறிப்பிடும்போது கவிச்சக்கரவர்த்தி,

> **''முற்றும் தன்னையே தமர்க்கு நல்கும் தனிப் பெரும் பதத்தை'' 16**
>
> ***(கிட்கிந்தா காண்டம்-வாலிவதைப்படலம்-71)***

என்று கூறுவான். 'தமர்' என்ற சொல்லுக்கு, சுற்றத்தார், தமக்கு வேண்டியவர், பரிசனம் என்று பொருள் கூறுவர். ஆனால், இவையனைத்துக்கும் ஒன்று அடிப்படை. அதாவது, அன்பு அல்லது பிணைப்பு. இறைவனுக்குச் சுற்றத்தார், வேண்டியோர், பரிசனத்தார் என்றால், இறைவனுடைய பக்தர்கள், தொண்டர்கள், அடியவர்கள்தாம். ஆகவே, ''தன்னையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதம்'' என்று கவிஞன் குறிப்பிடும்போது, தன்னுடைய பக்தர்களுக்கும் தொண்டர்களுக்கும் அடியவர்களுக்கும் தன்னையே தந்துவிடுகிற, அஃதாவது, தன்னையே உடைமையாக்கிவிடுகிற இறைப் பண்பைத்தான் குறிக்கிறான். இங்கே, 'என்னைப் பொருந்துறப் புல்லுக' என்று இராமன் அனுமனிடம் சொல்லும்போது, ''தம்மையேதமர்க்கு நல்கும்'' அந்த இறைப் பண்புதான் வெளிப்படுகிறது; செயல்படுகிறது.

# கைம்மாறு நாடாக் கருமம்

**T. S. ராமலிங்கம்,** எம்.ஏ., பி.எல்.

'வேட்ஸ் ஒர்த்' என்ற ஆங்கிலக்கவி கூறு கின்ருர் : ''நன்றி ஒருவருக்குச் செய்தக்கால், அவர் காட்டுகின்ற நன்றிஉணர்ச்சி அனேக மாக என்னை வருந்தும்படியாகத்தான் செய்து விடுகின்றது.'' "The gratitude of man hath oftener left me mourning." உதவி ஒருவருக்குச் செய்வது என்பது உலகில் அவ்வளவு அபூர்வ மாகிவிட்டதால்தான், தினைத்துணை செய்த உதவிக்குப் பனைத்துணையாக நன்றி உணர்ச்சி வளர்கின்றது. இது கவிக்கு வருத்தத்தைத் தருகிறது.

இராமாயணத்தில் கருடனுக்கு இராம பிரான் நன்றி செலுத்துகின்ற நிகழ்ச்சி நினை வுக்கு வருகிறது. நாகபாசத்தால் கட்டுண்டு, உயிர் இருக்கிறதோ இல்லையோ என்று ஐயுறும் படி இலக்குவன் இருக்கின்ருன். கருடன் வருகின்ருன். பாசம் நீங்குகிறது. விஷத்திற்கு மாற்றுக் கிடைத்ததால் இராமனுக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. கருடனுக்கு நன்றி செலுத்தத் தொடங்குகிருன். செய்யாமற் செய்த உத விக்குக் கைம்மாறு செய்வது இயலாது தன்னுல் என்று கூறுகிருன். இராமனுடைய நிலையில் பலர் இருப்பார்கள். பஸ் வருகைக்காகத் தவம் கிடக்கிருர் ஆசிரியர். காடில்லாக் (cadil-lac) காரில் அவ்வழியே செல்கின்ற மாண வன் ஆசிரியருக்கு ஒரு ''லிவ்ட்டு'' கொடுக் கிருன். இதற்குப் பிரதி உபகாரம் செய்வது ஆசிரியரால் முடியாத காரியம். ''மீட்சி செய் திறமில்லை'' தானே. ஒரு கணம் தோன்று கிறது யோசனை. ''பிரதி உபகாரம் ஏதாவது செய்யலாமாவென்று.'' பையனுடைய காரை யும் உடையையும் தோற்றத்தையும் நோக்கு கிருர்: உடனே, கைம்மாறு செய்ய முடியாது, செய்ய வேண்டியதில்லை என்ற தெளிவு ஏற் படுகிறது. ''கையுறை கோடற் கொத்த காட்சியை யல்லை'' என எண்ணுகிருர், இராமன் கருடனைப் பார்த்துச் சொன்னது போல.

கருடன் இந்த உதவியை ஏன் செய்ய முன் வருகிருன் என்ற ஆராய்ச்சியில் இறங்கு கின்ருன் இராமன். பழகின தோஷம் என்று ஒன்று உண்டு. கணவன் மனைவியிடம் சொல் லுகிருன் : ''நம்ம பாலு நாளைக்குச் சென்னை வருகிருனும், மெடிக்கல் செக்கப்பிற்காக; நம்ம வீட்டிலேயே இருக்கச் சொல்லிவிட்டேன்.'' மனம் கோணுத மனைவிக்கு முகம் கோணுகிறது. ஒரு விநாடிதான். பின் சொல்லுகிருன் : ''அது சரிதானே, நாம் எவ்வளவு பழகிவிட்டோம்.'' இராமன் நினைக்கிருன் ''கருடனும் நாமும் ஒரு பொழுதும் பழகினதே இல்லையே.'' சொல்லு கிருன்:

**''பண்டு இலை நண்பு''**

''நட்பைப்பற்றி நினைப்பானேன், கருடன் என்னைப் பார்த்ததுகூடக்கிடையாதே. என்னைப் பற்றி யாரும் சொல்லிக் கேட்டிருக்கக்கூட முடியாதே'' என்று நினைக்கிருன் இராகவன்.

**''கண்டு இலை முன்பு ; சொல்லக் கேட்டு இலை''**

பழைய நண்பனுக இருந்திருக்க வேண் டாம். கண்டுமிருந்திருக்க வேண்டாம். கேட்டு மிருந்திருக்க வேண்டாம். ''இம்மைச் செய்தது

மறுமைக்கு ஆம்'' என்றபடி இராமனுடைய மூதாதையர் செய்த உதவிக்கு ஈடாக, கருடன் இப்படி உதவினுனேவென்று நினைக்கக்கூட முடியவில்லை. கடன் ஒருவரிடம் வாங்கினுல் அவரிடமாவது அவருடைய சந்ததியாரிடமாவது அதைத் திரும்பக் கொடுத்துவிடவேண்டியது; கொடுக்காவிட்டால் பாவம். ஆனுல், கருடன் கடன் ஒன்றும் வாங்கவில்லையே!

**''கடனென்று எம்பால் கொண்டுஇலை''**

கருடன் உதவி அளித்ததற்கு, பின் என்ன தான் காரணம்? ''போர் செய்ய மாட்டேன்'' என்ற அர்ச்சுனனிடம் ''உன்னுல் போர் செய்யாமல் இருக்க முடியாது. உன் ஸ்வபாவமே உன்னைப் போரில் செலுத்திவிடும்'' என்று கண்ணபிரான் கூறியதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். தண்ணீருடைய சுபாவம், மேட்டு நிலத்திலிருந்து கீழ் நிலத்துக்குப் பாய்வதே. இதை 'Siphon' தத்துவம் என்று விஞ்ஞானத்தில் கூறுவர்.மேல் மட்டத்திலுள்ள பாத்திரத்திலிருந்து கீழ் மட்டத்திலுள்ள பாத்திரத்துக்குத் தண்ணீர் செல்வது அதன் சுபாவம். கீழ் மட்டத்திலுள்ள பாத்திரத்தில் தண்ணீர் இல்லை என்ருல்தான் மேல் மட்டத்திலுள்ள பாத்திரத்திலிருந்து நீர் வழிகின்றது என்று இல்லை. நண்பர்களுக்கு இடையே பரிமாறிக்கொள்ளுகிற அன்பு இத்தகையதே. தன்னுடைய அன்பு, நண்பனுக்குத் தேவைதானு என்று ஆராய்ந்து, அதன்பின் அன்பு செலுத்துவதில்லை. கருடனுடைய நற்செயலின் அடிப்படை இதுவே. கருடனுடைய சுபாவம் கொடுப்பதன்றி, கொள்ளுவதில்லை. வேறு ஒருவரிடமிருந்தும் ஏதாவது பெற்றுத்தான் நிறைவு அடைய வேண்டும் என்ற நிலை கருடனுக்கு இல்லை. குறைவு ஒன்றுமில்லை அவனுக்கு.

**''கொடுப்பது அல்லால் குறையிலை யிதுநின் கொள்கை''**

இராமனுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. ''என்ன செய்ய வேண்டுமென்று நீயே சொல்'' என்று கருடனிடம் கூறுகிருன். ''நாங்கள் செய்வது என், பகர்தி'' என்ருன். பாடல் முழுவதும் பார்ப்போம் :

**''கண்டுஇலை முன்புசொல்லக் கேட்டுஇலை**
**கடனென்று எம்பால்**
**கொண்டுஇலை கொடுப்பதல்லால்**
**குறையிலை யிதுநின் கொள்கை**
**உண்டுஇலை யென்னநின்ற உயிர்தந்த**
**உதவி யோனே**
**பண்டுஇலை நண்புநாங்கள் செய்வதென்**
**பகர்தி யென்ருன்''**

கருடன் போன பின்பும் இராமனுடைய வியப்பு தணியவில்லை. பெருந்தன்மையுடையவர்கள்,நற்செயல் செய்வதால் லாபம் எவ்வளவு கிடைக்குமென்று எண்ணிச் செய்வதில்லை. ''மாரியை நோக்கிக் கைம்மா றியற்றுமோ வையம்?'' மாரியைப் போலவே கருடனும் ''யாதும் காரியம் இல்லான்.''

இந்தப் பாடலைப் படிக்கின்றபொழுது சில சந்தேகங்கள் தோன்றலாம். ஆதிசேடனின் அவதாரமாகிய இலக்குவன் நாக பாசத்தால் எவ்வாறு கட்டுண்டான்? காலமும் கணக்கும் நீத்த காரணனுகிய பரம்பொருளுக்குக் கருடன் யார் என்று தெரியாமலா போய்விட்டது? கருடன் ஞாபகம் மூட்டியும் தெரியாமல் போய்விட்டதே. இதற்கு விடை கருடனே அளிக்கின்ருன், முற்றுணர்வுடைய கடவுள் மானுடச் சட்டை தாங்கியவுடன் மக்களே போல் ஆவர். இப்படி ஆக்குகின்ற மகாமாயத்தை யாரால் தான் அறிய முடியும்? பெரிய சமய தத்துவம் இங்கு சர்ச்சை செய்யப்படுகிறது. நாம் அதில் ஈடுபட வேண்டியதில்லை. தோப்பிற்குச் சென்ருல் மாம்பழத்தைப் புசித்து ருசிக்கவேண்டுமேயல்லாது எத்தனை மரங்கள் இருக்கின்றன, எவ்வளவு கிளைகள், எவ்வளவு இலைகள் இருக்கின்றன என்று கணக்கெடுப்பது பயனற்றது என்று இராமகிருஷ்ண பரமஹம்சர் கூறுகிருர். கம்பராமாயணத்தைச் சிறந்த சமயநூலாகவும் கொள்ளலாம். மேலை நாட்டோர் ஆய்வுக்கு ஏற்ற உலக இலக்கியமாகவும் கொள்ளலாம். இவ்விரண்டுக்கும் சான்ருக அமைகின்றது மேல் கண்ட பாடல்.

卐

# இராமன் நாடு திரும்பியது

பெ. நா. அப்புஸ்வாமி, பி.ஏ., பி.எல்.

உண்மையாக ஒரு நிகழ்ச்சி நிகழ்கிறது. அது நிகழ்வதை அயலில் உள்ள இருவர் நேரில் தம் கண்ணுல் காண்கிருர்கள். தாங்கள் கண்டதை அவ்விருவரும் பின்னர்க் கூறுவார்களாஞல், அவ்விருவர் கூறும் வரலாறுகளும் அங்கங்கே சிறிது மாறுபடும். இதுதான் இயற்கை. நீதி மன்ற அனுபவம் உள்ளவர்களுக்கு இது நன்ருகத் தெரியும். கவனம், அறிவு, விருப்பு, வெறுப்பு முதலிய உணர்ச்சிகள், சொல்திறம் என்பவைகளில் அவர்களுக்கு இடையே உள்ள வேற்றுமைகளால், அவர்கள் கூறும் வரலாறுகள் மாறுபடுகின்றன. அந்நிகழ்ச்சி அவர்கள் நேரில் கண்ட நிகழ்ச்சியாக இராமல், அவர்கள் கேள்வியுற்ற நிகழ்ச்சியாகவோ, அல்லது யாரேனும் ஒருவர் படைத்த கற்பனை நிகழ்ச்சியாகவோ இருந்தால், அவர்கள் கூறும் வரலாறுகளில் உள்ள வேறுபாடுகள் இன்னும் மிகுந்து காணப்படுவது இயற்கை. இவை அல்லாமல், இத்தகைய வரலாறுகளைக் கூறுபவர்கள் சாமானிய மக்களாக அல்லாமல் கவிமனம் நிரம்பப் படைத்தவர்களாக இருந்துவிட்டாலோ, உண்மையாக நிகழ்ந்த நிகழ்ச்சிக்கும், அவர்கள் உண்மையைக் கூறுவதாகவே கருதிக் கூறும் வரலாற்றுக்கும் இடையே உள்ள தொடர்பு மிக மிகக் குறைவாக இருக்கும். அத்தொடர்பு, எளிதில் விட்டுப்போகும் அளவுக்கு மெல்லியதாக இருக்கும். அங்சங்கே அது விட்டுப்போவதும் உண்டு. இலக்கிய உலகில் ஒரு சிறந்த உதாரணத்தால், இதைச் சற்றே பார்ப்போம்.

இராமாயணக் கதை உண்மையாக நடந்த நிகழ்ச்சிகளின் அடிப்படையில் எழுந்ததா? அல்லது, உண்மை நிகழ்ச்சியோடு கற்பனை கலந்த வரலாரு? அல்லது முற்ற முழுக் கற்பனைதாஞ?—இத்தகைய ஆராய்ச்சிகளில் நாம் இப்போது இறங்க வேண்டியதில்லை. இவ் விஷயத்தில், அவரவர்களுடைய உணர்ச்சி, நம்பிக்கை, அறிவு முதலியவையே அவரவர்கள் ஆதாரமாகக் கொள்ளத்தக்கவை; முடிவு காண்பதற்கு உரியவை.

நமது நாட்டில் இராமாயணக் கதையை எத்தனையோ பேர் கூறியிருக்கிருர்கள். இன்னும் எத்தனையோ பேர் கூறி வருகிருர்கள். அயல்நாடுகளிலும் இக்கதை வழங்கிவருகிறது. இவற்றில் எல்லாம் சிறிய அளவிலோ பெரிய அளவிலோ வேற்றுமைகள் காணப்படுகின்றன என்பதைப் பல பேரறிஞர்கள் சுட்டியும் விளக்கியும் காட்டியிருக்கிருர்கள். அவ்வேற்றுமைகளுக்குக் காரணம் என்ன என்று ஆராயப் புகாமல், அவ்வேற்றுமைகள் உள்ளன என்பதை மட்டும் தெரிந்து கொள்வது சுவை பயப்பனவாய் இருக்கும். இங்கு ஓர் உதாரணத்தைச் சிறிது பார்ப்போம். நாடு துறந்து, காடு சென்று, அரக்கரை வென்று இராமன் நாடு திரும்புகின்ற வரலாற்றுப்பகுதியை வால்மீகி, போஜன், கம்பன் என்னும் மூன்று கவிகள் எப்படிக் கூறுகிருர்கள் என்று நோக்குவோம். இவர்களுள் காலத்தால் முற்பட்டவர் வால்மீகி, இடைப்பட்டவர் போஜன், பிற்பட்டவர் கம்பன். மற்ற இருவர்களோடு ஒப்பிடும்போது, போஜன் கவிதைத் திறத்தில் தாழ்ந்தவன் என்பதைப் பலரும் ஒப்புவார்கள். அதோடு அவனுடைய நூலும் அளவில் சிறியது.

போஜன் கூறும் வரலாறு, அவன் எழுதிய 'போஜ சம்பூ' என்று வழங்கும் **சம்பூ ராமாயணத்தில்** சொல்லப்பட்டுள்ளது. அதில் இந்தப் பகுதி மிகச் சுருக்கமாக வருமாறு கூறப்பட்டிருக்கிறது.

தன்னுடைய கற்புக்கு எத்தகைய இழுக்கும் ஏற்படவில்லை என்பதை உலகறிய மெய்ப்பிப்பதற்காக, சீதை தீயினுள் புகுந்தாள். அவளுடைய பெருங்கற்பின் தூய்மையால், தீயும் புனிதமாயிற்று. அதன்பின் இராமன் அவளை மனமார ஏற்றுக்கொண்டான். பிறகு, பிரம தேவன் அங்கு வந்து, இராமனைப் புகழ்ந்து, அவனுடைய தந்தையான தசரதனை அவனுக்குக் காட்டினான். இராமன் அவனை வணங்க, அவன் இராமனை வாழ்த்தினான்.

பிறகு, அங்குள்ள பலரும் உடன்வர, இராமன் விரும்பியவாறு, செல்லவல்ல வானூர்தியில் ஏறினான். அவ்விமானம் உயர ஏற ஏற, வானம் மேன்மேலும் விரிவுடையதாகத் தோன்றிற்று. கீழுள்ள பெருங்கடல் ஒரு சிறு குட்டையைப் போல் தோற்றம் அளித்தது. அதைக் கண்டதும், அங்குள்ள குரங்குகள் எல்லாம் அனுமனை நோக்கி, ''இந்தக் குட்டையைத் தாண்டியதற்காகவா நீ இவ்வளவு பெருமையடித்துக்கொண்டாய்?'' என்று சொல்லிச் சிரித்தன. வழிநெடுக உள்ளவற்றைப்பற்றி இராமன் சீதைக்குச் சொல்லி வந்தான். பின்பு பாரத்துவாச முனியின் ஆசிரமம் வந்தது. அத் துறவிமாடத்தின் அருகே மானும் சிங்கமும் மனமொத்து வாழ்ந்தன. பாம்பும் மயிலும் அவ்வாறே. அங்கே அந்த விமானம் இறங்கிற்று. அதில் ஏறிவந்த பயணிகளைப் பாரத்துவாச முனிவர் வரவேற்று விருந்தளித்தார். தன் வரவைப் பரதனுக்கு உணர்த்தும்படி இராமன் அனுமனை அனுப்பிவிட்டு, மீண்டும் விமானத்தில் ஏறி, அயோத்தி நகரை அணுகினான். அங்கே, கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக, அமைச்சர் முதலியோர் புடைசூழப் பரதன் வரக்கண்ட இராமன், அவனை அன்பு ததும்ப நோக்கினான். ஊர்தியிலிருந்து இறங்கினான்.

அப்போது, மணிகள் இழைத்த பாதுகைகளை ஏந்திய பரதன், இராமனின் காலில் விழுந்து வணங்கினான். அவனை இராமன் உடனே தூக்கி, மார்போடு அணைத்துக்கொண்டான். அவனுடைய உடல், தவத்தால் மெலிந்திருக்கக் கண்டான். அவனை மீண்டும் மீண்டும் நெடுநேரம் கையால் தடவிக் கொடுத்தான்.

பிறகு, பரதன் இலக்குவனை அணைத்துக் கொண்டான்; சீதையை வணங்கினான். பிறகு, மற்றவர்கள் அனைவரையும் வரவேற்று, தன்னுடைய ஆசிரமத்துக்கு அழைத்துச் சென்றான்.

இதுதான் போஜன் கூறும் வரலாறு. இனி வால்மீகி கூறுவதைப் பார்ப்போம்:

அங்கும் சீதையின் கற்பு மெய்ப்பிக்கப்படுகிறது. அந்த இடம் மிகவும் உருக்கமாகச் சொல்லப்படுகிறது. விபீஷணன் சீதையை இராமனின் முன் அழைத்து வந்தான். அப்போது சீதையைக் கண்ட இராமன் அவளைக் கடிந்து கூறினான். அவளுடைய நடத்தையில் தனக்குள்ள அவநம்பிக்கையைத் தெரிவித்தான். சீதை மனம் நொந்து, துடிதுடித்தாள். கண்ணீர் பெருக, இராமனை நோக்கி ''நீங்கள் உங்களுக்குத் தகாத கொடிய சொற்களைச் சொல்கிறீர்கள். என் பெண் தன்மையை எண்ணினீர்களே அன்றி, என்னுடைய ஒழுக்கத்தை எண்ணவில்லையே'' என்றாள். உயிர் துறக்கவும் துணிந்தாள்.

பிறகு, அவளுடைய சொற்படியும், இராமனின் கருத்துப்படியும், இலக்குவன் தீயை மூட்டினான். அது கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியதும், சீதை இராமனை வலம் வந்து, தெய்வங்களை வணங்கி, 'எனது உள்ளம் என்றென்றைக்கும் இராமனை விட்டு வழுவாமலிருந்தது உண்மையானால்...... நான் மனமொழி மெய்களால் இராமனை விட்டு விலகாதவள் என்பதைத் தெய்வங்கள் உணர்ந்திருக்குமானால்.... இந்த அக்கினித் தெய்வம் என்னைப் பாதுகாப்பதாக!' என்று வன்மொழி கூறி, அக்கினியை வலம் வந்து, சற்றேனும் மனக் குழப்பம் இன்றி, அதனுள் குதித்தாள். உலகம் அனைத்தும் கலங்கிற்று. இராமனின் மனமும் குழப்பமடைந்தது.

அப்போது அக்கினித் தெய்வம் சீதைக்கு எவ்விதத் தீங்கும் செய்யாமல், அவளை ஏந்தி எடுத்து, இராமனின் முன் வைத்தது. பின்பு, பல தெய்வங்களும் காட்சியளித்தன. தயரதன் வந்து இராமனை வாழ்த்தினான். சீதையைத் தேற்றினான். இராமன் சீதையை ஏற்றுக் கொண்டான்.

பின்பு, விபீஷணன் தனது புட்பக விமானத்தை இராமனுக்குக் கொடுத்தான். எல்லோரும் அதில் ஏறிப் புறப்பட்டார்கள். இடம் இடமாக இராமன் சீதைக்கு அறிமுகப்படுத்தி வந்தான். பிறகு, பாரத்துவாச முனிவருடைய ஆசிரமத்தை அவ்வனைவரும் அடைந்தார்கள். அங்கே ஒரு நாள் தங்கி, அம்முனிவருடைய விருந்தை ஏற்று, மகிழ்ந்திருந்தார்கள்.

அதன்பின்பு, இராமன் அனுமனை அழைத்து, 'நீ முன்னால் சென்று, நம்முடைய வருகையைப் பரதனுக்கு அறிவி. நிகழ்ந்தவை அனைத்தையும் அவனிடம் சொல். நாம் இப்போது அரக்கர் வேந்தனான விபீடணனோடும், வானர வீரர்களோடும் வந்திருக்கிறோம் என்பதைச் சொல். இச்செய்தியைக் கேட்டதும் பரதனுடைய முகக்குறி எப்படி உள்ளது என்பதைக் கவனி. அவனுடைய முகத்தில் தோன்றும் குறிகளாலும், அவனது பார்வையாலும், அவனது பேச்சாலும், அவன் நம்மிடம் கொண்டிருக்கும் கருத்து முழுவதையும் தெரிந்துகொள். அவனுக்கு இராச்சியத்தில் ஆசை இருக்கிறது என்பது தெரிந்தால், அவனே இவ்வுலகம் முழுவதையும் ஆளட்டும்' என்று சொல்லி, அவனை அனுப்பினான்.

அனுமன் குகனைப் பார்த்துச் செய்தியைத் தெரிவித்துவிட்டு, நந்திக் கிராமத்துக்கு அருகில், மரமடர்ந்த தோட்டம் ஒன்றைக் கண்டான். அங்கே மரவுரியும் மான்தோலும் அணிந்தவனாய், கண்டார் இரங்கும் தோற்றமுள்ளவனாய், உடல் இளைத்தவனாய், மயிர் முடியைச் சடையாகத் திரித்தவனாய், மேனி முழுதும் மாசு படிந்தவனாய், துயரால் உடல் சோர்ந்தவனாய், கனி கிழங்குகளை உணவாகக் கொண்டவனாய், ஐம்புலன்களை வென்றவனாய், தவத்தை மேற்கொண்டவனாய், அறநெறியைப் பின்பற்றுபவனாய், தூய உள்ளம் உடையவனாய், உள்ளொளியால் ஒளிரும் முகத்தை உடையவனாய், தன் தமையனின் மர-அடி இரண்டையும் முன் வைத்து உலகத்தை ஆள்பவனாய், அமைச்சரும் பிறரும் புடை சூழ, ஆசிரமத்தில் வாழும் பரதனை அங்கே கண்டான்.

அறமே மானிட உருக்கொண்டது போல் தோன்றிய பரதனை வணங்கி, அனுமன் தன் செய்தியைத் தெரிவித்தான். அதைக் கேட்டதும், பரதன் அச்செய்தியால் தான் பெற்ற மகிழ்ச்சியைத் தாங்க முடியாமல், மண்ணில் மயங்கி விழுந்தான். பிறகு, மயக்கம் தெளிந்தெழுந்து, அனுமனைக் கட்டிக்கொண்டான். பிறகு, 'மாபெரும் காட்டுக்கு இராமன் சென்ற பின் மிகப்பல ஆண்டுகள் ஆயினவே. ஆயினும், என்னுடைய தலைவனைப் பற்றிய நற்செய்தியை நான் இன்றுவது கேட்கக் கிடைத்தது அல்லவா ? உலகம் கூறிவரும் பழமொழி ஒன்று உள்ளது. அது கூறுவது உண்மை என்பது இப்பொழுதுதான் எனக்கு நன்றாக விளங்குகிறது. 'ஒருவன் உயிர் தங்கி மட்டும் வாழ்ந்து வருவானானால், நூறு ஆண்டுகள் ஆயின் பிறகேனும் பெரும் மகிழ்ச்சி அவனை வந்து எய்துவது திண்ணம்' என்பதுதான் அந்தப் பழமொழி'' என்று பரதன் அனுமனிடம் கூறினான்.

இதில் காணப்படும் சுவை ஒன்றைத் தெரிந்துகொள்வது நன்று. வால்மீகி இராமாயணத்தில் இந்த வாக்கியம் இரண்டு இடங்களில் காணப்படுகிறது. அதன் வடமொழி வடிவத்தைத் தமிழ் எழுத்துக்களில் இவ்வாறு எழுதலாம்.

**'கல்யாணீ பத காதேயம் லௌகிகீ
ப்ரதிபாதி மே : ஏதி ஜீவந்தம் ஆனந்தஹ
நரம் வர்ஷ சதா தபி'**

இராமன் வருகைக்காக நெடுங்காலம் காத்திருந்த பரதன்,இராமனைப்பற்றிய செய்தியைத் தெரிவித்த அனுமனிடம் கூறுவதாக இந்த வாக்கியம் அமைந்திருக்கிறது. இதற்கு முன் ஒரு முறையும் இராமனைப் பற்றிய செய்தியை வேறொருவருக்குஅனுமன் சென்று கூறியது இராமன் கதையைத் தெரிந்தவர்கள் எல்லோருக்கும் தெரியும். சீதையைத் தேடிச் சென்ற அனுமன் இலங்கையில் அவளைக் காண்கிறான். இராமனைப் பற்றிய செய்தியை அவளுக்கு அறிவிக்கிறான். இராமனை எப்போது காண்போம் என்று ஏங்கிக் கிடந்த பரதனைப் போல் அவளும் ஏங்கி இருந்தவள், நெடுங்காலமாக நற்செய்தி ஒன்றும் கிடைக்காமல் இருந்தவள். கிடைக்காததால் தன் உயிரை விட்டுவிடத் துணிந்தவள். அவளுக்கு அனுமன் நற்செய்

யைத் தெரிவித்தவுடன் அவளும் அகமகிழ் கிருள். இத்தனை நாள் காத்திருந்ததால் அல்லவோ நற்செய்தி கிடைத்தது என்று எண்ணுகிருள். அவளும் இதே வாசகத்தை - 'கல்யாணீ' என்று தொடங்கும் வாசகத்தை - அனுமனிடம் கூறுகிருள். இதைக் கூறுபவர் வெவ்வேமுன இருவர். இதைக் கேட்பவன் ஒருவன் - அனுமன். வால்மீகி வேண்டும் என்றே கையாண்ட உத்தியாகத்தான் இது இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இனிக் கதையைத் தொடர்வோம்.

பரதன் இவ்வாறு கூறிவிட்டு, இராமனைப் பற்றிய செய்திகளைக் கூறுமாறு அனுமனை வினவினன். அனுமன் அனைத்தையும் சொன்னன். அதைக் கேட்ட பரதன், 'என் மனம் இத்தனை நாளாகக் கொண்டிருந்த பேராவல் இன்றுதான் நிறைவேறிற்று' என்று அளவு கடந்த மகிழ்ச்சியோடு வாய்விட்டுச் சொன்னன். மகிழ்ச்சிப் பெருங்கடலில் மூழ்கினன். சத்துருக்கினனின் மனநிலையும் அவனுடைய மனநிலையையே ஒத்திருந்தது. அதன்பின்பு, இராமனை வரவேற்பதற்கான முயற்சிகள் தொடங்கப்பட்டன. சத்துருக்கினன் ஏவலாளர்களை அழைத்து, 'நந்திக் கிராமத்திலிருந்து அயோத்தி மாநகர் வரையிலும் உள்ள வழியை மேடு பள்ளங்களின்றிச் செம்மைப்படுத்துங்கள். பனியைப் போலக் குளிர்ந்த நீரை வழி முழுமையும் தெளியுங்கள். வழிநெடுக, பொரியையும் மலர்களையும் வாரி இறையுங்கள். எல்லாத் தெருக்களிலும் கொடிகளைத் தூக்கி நிறுத்துங்கள். அதிகாலை முதலே, மலர்மாலைகளையும் விடுதிப் பூக்களையும் வீடுகளில் இட்டு அழகுபடுத்துங்கள். நறுமணம் கமழ்பவையும், ஐவகை நிறங்களை உடையவையுமான, வண்ண நறும் பொடிகளால்; அரசபாட்டைகளில் நெருக்கம் இன்றி, அழகாகக் கோலம் போடுங்கள்' என்று உத்தரவிட்டான்.

நகரமாந்தர் பலரும் நந்திக் கிராமத்துக்கு வந்து, பரதனைக் கண்டார்கள். பின்பு, அவர்கள் எல்லோரும் பரதனேடுகூடச் சென்ருர்கள். இராமனை எதிர்கொண்டு அழைக்க, ஆவலோடு விரைந்தார்கள். இராமன் வரச் சற்று நேரம் ஆகிவிட்டது. ஆகவே, இராமன் வரவில்லையே என்று மனம் தளர்ந்தார்கள். அப்போது அனுமன் அவர்களை நோக்கி, "இராமன் முதலியோர் பாரத்துவாச முனிவரால் விருந்தளிக்கப்பட்டார்கள். இதோ வந்துவிடுவார்கள். அதோ, தொலைவில் குரங்குகளின் ஆரவாரம் கேட்கிறதே, அதோ தூளி உயர எழும்பிக் காண்கிறதே. படைகள் விரைந்து வருகின்றன'' என்று தேறுதல் சொன்னன்.

பிறகு, அனைவரும் இராமனைக் கண்டார்கள். 'அதோ, இராமன் !' என்னும் பேரொலி எழுந்தது. கூப்பிய கைகளுடன், பரதன் முன் சென்று, இராமனை வணங்கினன். இராமன் அவனுக்குக் கைகொடுத்து, அவனை விமானத்தில் ஏற்றி, தன்னுடைய மடியில் அவனை இருத்தி, மனமகிழக் கட்டித் தழுவினன். பிறகு, அவனேடு வந்த பிறரையும் இராமன் மகிழ்ச்சியோடு வரவேற்ருன். அவர்களும் பெருமகிழ்ச்சி கொண்டிருந்தார்கள்.

அப்போது பரதன், தான் அதுவரை ஆண்டுவந்த இராச்சியத்தை இராமனிடம் ஒப்புவித்தான். இதுதான் வால்மீகி கூறும் வரலாறு. அது கவிதை வடிவத்தில் அமைந்துள்ளது. பற்பல நயங்கள் நிரம்பித் ததும்புவது. ஊன்றிப் படிப்போரின் உணர்ச்சிகளை, இங்கொரு சொல் அங்கொரு சொல்லாலும், இங்கொரு வாசகம் அங்கொரு வாசகத்தாலும் தட்டி எழுப்புவது. நிகழ்ச்சியை மிக நன்ருகச் சித்திரித்துக் காட்டுவது. அதனின்று எழும் உணர்ச்சிகளைச் சில வேளை வெளிப்படையாகவும், சில வேளை குறிப்பாகவும், சில வேளை சிறிதுமே சுட்டாமல் படிப்போனே தானுகப் பெறட்டும் என்று விட்டும், பல உத்திகளைக் கையாண்டு, கூறப்படுவது, எளிமையானது, கருத்தாழம் மிகுந்தது.

இந்த வரலாற்றில் கூறப்படும் பரதன் இராமனின்மீது மட்டற்ற பற்றுள்ளவன். அவன் வருகையை எண்ணித் தவம் கிடந்தவன். அவன் வரும்வரை எவ்வித இன்பத்தையும் பெறலாகாது என்று இருந்தவன் ; இராமனது ஆண்மையிலும், சொல்லிலும், முற்று முழுநம்பிக்கை உடையவன் ; பொறுமை மிக்கவன் ; அளவறிந்து நடப்பவன் ; உணர்ச்சிகளை மேலிட விடாதவன். இராமனின் வருகையைக் கேட்டதும் வாடிய மனம் தளிர்த்து மகிழ்ந்தவன். இனிக் கம்பராமாயணத்தில் கூறப்படும் வரலாற்றைப் பார்ப்போம்.

வெற்றிச் செய்தியைச் சீதைக்குச் சொல்லிவர இராமன் அனுமனை அனுப்பினன். அதைக்

கேட்ட சீதை களிப்பு மிகுதியால் பேச நா வெழாமல் இருந்தாள். பின்பு தன் நிலையை விளக்கினள். அப்போது இராமன் விபீடணனை நோக்கி, 'சீதையைச் சீரொடும் தா' என்று அனுப்பினன். அவன் வேண்ட சீதை கோலம் கொள்ள இணங்கினள். வானமாதர்கள் அவளுக்குக் கோலம் புனைந்தார்கள். போர்க்களம் சார்ந்த சீதை இராமனது திருமேனியைக் கண்டாள். இராமனைத் தொழுது ஏக்கம் நீங்கினள். இராமனும் அவளை அமைய நோக்கினன். பிறகு, சினக்குறிப்புடன் அவளைக் கடிந்து கூறினன். 'பெண்மையும், பெருமையும், பிறப்பும், கற்பு எனும் திண்மையும், ஒழுக்கமும், தெளிவும், சீர்மையும், உண்மையும் நீ எனும் ஒருத்தி தோன்றலால் மாய்ந்தன' என்றான்.

அதைக் கேட்டு, முனிவரும், பிறரும், சீதையும், மிகவும் வருந்தினர்கள். இராமன் சொற்படி, சீதை சாகத் துணிந்தாள். 'தீயை மூட்டு' என்று சீதை இலக்குவனை ஏவ, இராமனும் அதைக் குறிப்பாகக் கூறினன். அப்போது சீதை தீயை வலம் வந்து, இராமனை வணங்கி, 'மனத்தினல், வாக்கினல், மறுஉற்றேன் எனின் 'என்னைச் சுடு' என்று தீயை வேண்டி, அதனுள் குதித்தாள். குதித்ததும் அவளுடைய கற்பின் தீயினல் அக்கினி வெந்து போயிற்று. அக்கினி தேவன் சீதையை ஏந்திக்கொண்டு, இராமனை வணங்கினன். சீதை மாசற்ற கற்பினள் என்றான். இராமனும் அதை ஏற்றுக்கொண்டான்.

'பிறகு பிரமதேவன் வந்து இராமனைப் புகழ்ந்தான். சிவபெருமானின் ஆணைப்படி தயரதனும் அங்கே வந்து, இராமனை வாழ்த்தி, சீதைக்குத் தேறுதல் மொழி கூறினன். ''இராமன் தான் செய்த செயலால் உன்னைக் 'கற்பினுக்கரசி' என்று காட்டிவிட்டான்'' என்றான். பின்பு, அவனும், அங்குக் கூடிய தேவர்களும் வரமளித்துவிட்டுச் சென்றார்கள்.

பிறகு 'பதினான்கு ஆண்டுகள் இன்றோடு முடிகின்றன. இங்கிருந்து விரைவில் செல்ல ஓர் ஊர்தி உண்டோ ?' என்று இராமன் கேட்டான். வீடணன் புட்பக விமானத்தைக் கொணர்ந்தான். அனைவரும் அதில் ஏறிப் புறப்பட்டார்கள். விமானம் வடதிசை நோக்கிச் சென்றது. வழியில் உள்ள காட்சிகளை இராமன் சீதைக்குக் காட்டிச் சொல்லி வந்தான். நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் கூறிவந்தான். பிறகு, சித்திரகூடத்தில் பாரத்துவாச ஆசிரமம் வந்தது. 'மாதவப் பயன் உருவு கொண்டு எதிர் வருமாபோல்' பாரத்துவாசன் வரக் கண்டான். அப்போது இராமன் இறங்கி, அம்முனிவனின் தாள்மிசைப் பணிந்தான். அவன் அளித்த விருந்தை ஏற்று, அன்று புறப்படாமல், மறுநாள் புறப்படுவதாக முடிவு செய்து, அச்செய்தியை அனுமன் மூலமாகப் பரதனுக்குச் சொல்லியனுப்பினன். அடையாளமாகத் தன் மோதிரத்தையும் கொடுத்தனுப்பினன். அம்மோதிரத்தைப் பெற்ற அனுமன் வாயு வேகமும், இராமனின் அன்பின் வேகமும், தன் மனோவேகமும் பிற்படும்படி, மிக வேகமாகச் சென்றான்.

அப்போது, பரதன் நந்தியம்பதியில் எப்பொழுதும் இராமனுடைய திருவடிகளையே பூசித்துக்கொண்டு, ஐம்பொறிகளையும் அடக்கி வாழ்ந்து வந்தான். இராமனுடைய பிரிவை ஆற்றாமல் வருந்தி, அன்பே உருவெடுத்தது போலத் தோன்றினன். காய்கனி கிழங்குகளையே உணவாக உண்டு வந்தான். இராமன் சென்று, மீள வேண்டிய தென்திசையையே நோக்கி நின்றான். இராமன் வருவதாகக் கூறிப் போன நாள், அவன் வரவேண்டிய நாள், என்று என்று சோதிடரைக் கேட்டு, அன்று தான் என்பதைத் தெரிந்துகொண்டான். உடனே, இராமன் வரவில்லையே என்று ஏங்கி, மயக்கமுற்று விழுந்தான். இராமனுக்கு ஏதோ பெருந்தீங்கு நேர்ந்திருக்க வேண்டும் என்று எண்ணினன். ஆனல், உடனே மற்றோர் எண்ணம் தோன்றிற்று. இராமனுக்கு எதிராக நிற்கக்கூடியவர் மூவுலகத்திலும் இல்லையாதலால், அவனுக்கு எவ்விதத் தீங்கும் நேர்ந்திருக்க முடியாது என்று ஐயம் தெளிந்தான்.

பின்னும் வேறு எண்ணங்கள் தோன்றின. 'பரதனுக்கு ஆட்சி புரிய ஆசை இருக்கலாம். அவனே ஆட்சி புரியட்டும்!' என்று எண்ணி, வராமல் இருந்துவிட்டானோ ? என்னவாயினும், அவன் வரவில்லை. ஆதலால், நான் என் உயிரை விட்டுவிடுவதே நன்று' என்று முடிவு செய்தான். சத்துருக்கினனை அழைத்து, 'நீ மன்னன் ஆவாய்' என்று சொன்னன். அவன் மனம் நொந்து மறுத்தான். ஆதலால், தன் உயிரை விடுவதற்காகத் தீயை மூட்டச் சொன்னன்.

அச்செய்தி கோசலைக்குத் தெரிந்தது. அவள் அலமந்து, ஏங்கி, ஓடிவந்து, அவன் தீக்குளிக்க லாகாது என்று விலக்க வந்தாள். அவனைப் பற்றிக்கொண்டு, ''முன்னால் நடந்தவை எல்லாம் விதி காரணமாக நடந்தன. நீ இவ்வாறு செய்யாதே. செய்தால் நாடு முழுதும் தீயில் விழுந்து இறக்கும், மன்னர் முதலியோர் இறப்பார்கள், நாங்களும் இறப்போம், அறமே நெருப்புக்கு இரையாகிவிடும். உலகம் நிலை கலங்கிப் போகும். அநேக கோடி இராமர்களும் உன்னுடைய அன்புக்கு ஈடாகமாட்டார்கள். புண்ணியமே உயிர் பெற்று வந்ததைப் போன்ற உன் உயிர் போனால், 'மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ? இராமன் ஒருவன் வரவில்லை என்னும் காரணத்தால், உலகம் முழுவதையும் அழித்துவிட அல்லவோ எண்ணுகிறாய். இராமன் இன்று வரவில்லையானால் நாளை வருவான். அவன் சொல்லிய சொல் தவற மாட்டான்'' என்று சொன்னாள்.

அதற்குப் பரதன் ''தாய் சொல்வதைக் கேட்பதும் தந்தை சொல்வதைக் கேட்பதும் இராமன் செய்யவல்ல செயல்கள். நான் அவனைப் போன்றவன் அல்லன். நான் கூறிய சபதத்தை நிறைவேற்றி உயிர்விடப் போகிறேன்'' என்றான். தீயை அணுகினான். அப்போது அனுமன் தோன்றினான். ''இராமன் வருகிறான்'' என்று கூறி, அந்த நெருப்பை அவித்தான். 'கையினால் எரியைக் கரி ஆக்கினான்!''

''நான் சொல்லும் இச்சொல்லைக் கேட்க வேண்டும்'' என்று கூறினான். ''இந்நாள் முடிவதற்கு இன்னும் நாற்பது நாழிகை இருக்கிறது. இராமன் வருகிறான் என்பதற்கு இதோ ஒரு பேரடையாளம் உள்ளது'' என்று தன்னிடம் இருந்த மோதிரத்தைக் காட்டினான்.

அதைக் கண்டதும், மெலிந்து வாடி, ஊதினால் பறந்து போகுமோ என்று இருந்த உடலை உடையவனாக இருந்த பரதன், திண்ணிய தோள்களை உடையவன் ஆனான். அவன் அழுதான், சிரித்தான், மோதிரத்தை ஏந்திய தன் கைகளால் அனுமனைத் தொழுதான். எழுந்து துள்ளினான். சோர்ந்து விழுந்தான். மனம் கலங்கினான். உடல் பூரித்தான். பக்கத்தில் உள்ளவர்களோடு சேர்ந்து கூத்தாடினான். கைதட்டி மகிழ்ந்தான். அங்கிருந்த பார்ப்பனர்களை வணங்கினான். மன்னர்களையும் தாதியர்களையும், தன்னையுங்கூட வணங்கினான். எழுந்து நின்றான். தான் செய்வது இன்னதென்றே தெரியாமல் இருந்தான். இவற்றை எல்லாம் பார்த்தபோது, ''அன்பு என்பது கள்ளைப் போன்றது; அதை நிரம்பப் பெற்றவன் நிலை தடுமாறி நடப்பான் என்பது தெரிகிறது'' என்று கம்பன் கூறுகிறான்.

இந்த இடம் கற்பனைப் பெருக்கெடுத்து ஓடும் இடம் - உயர்வு நவிற்சி மேலோங்கிக் காணும் இடம். மேலும் கதை செல்லுகிறது. அப்போது பரதன் கேட்க, அனுமன் தன் பேருருவைக் காட்டுகிறான். நிகழ்ந்த பலவற்றையும் கூறுகிறான். அப்போது விமானம் வருகிறது. அனுமன் அதிலுள்ளவர்களைப் பரதனுக்கு அறிமுகம் செய்விக்கிறான். புட்பகம் நிலத்தில் இறங்குகிறது. அடியில் விழுந்து வணங்கிய பரதனை இராமன் அன்புறத் தழுவுகிறான்.

பின்பு, திருமுடி சூட்டுவதற்குச் செய்ய வேண்டிய யாவும் செய்யப்படுகின்றன.

இவ்வரலாறுகளில் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளுக்குக் காரணங்கள் பல. நாடு, மரபு, காலம், மொழி, இலக்கிய முறை முதலிய பலவும் இவ்வரலாற்றுச் செய்திகளையும் வருணனைகளையும் சிறிதும் பெரிதும் மாறச் செய்துள்ளன. அவற்றை எல்லாம் நன்கு தெரிந்து, ஊன்றிப் படிப்பது நன்று. அவ்வாறு படிக்கப் படிக்க, சுவை மிகும், இலக்கியத்தின் உயர்வைக் காண முடியும், கண்டு மகிழ முடியும்.



# இராம காதையில் சில மறைபொருள்கள்

கி. பக்ஷிராஜன்

தன் கவிதைத் திறன் தோன்ற ஒரு கவி காவியம் செய்வது போன்று கம்பர் தமது இராமாயணத்தை எழுதவில்லை. இராம காதை அவர் பிறப்பதற்கு வெகுகாலத்துக்கு முன்பிருந்தே இப்பரத கண்டத்தில் ஒரு புனித இதிகாசமாகப் போற்றப்பெற்றுவிட்டது. இங்ஙனம் அனைவரும் பன்னெடுங்காலமாகப் பய பக்தியுடன் போற்றிவந்த ஒரு சரிதத்தை மீண்டும் எழுதிப் பேரும் புகழும் பெறுதல் இலேசான காரியமன்று. ஒரு செயற்கரிய செய்கையைச் செய்து ''பெரியன்'' என்ற பெயர் பெற்றார் கம்பர். 'கல்வியில் பெரியன் கம்பன்' என்ற வழக்குண்மை அனைவரும் அறிந்ததே. ஈண்டு, கல்வி என்பது பொதுவான இலக்கியக்கல்வியை மட்டுமன்றி, இராம காதையைப் பற்றிய கல்வியையும் குறிக்கும். அவரது பரந்த இலக்கியக்கல்வி — தமிழிலும் பிற மொழிகளிலும் உள்ள இலக்கியக்கல்வி- இராமாயணத்தைக் கற்பவர்க்கு எளிதிலே புலனாகும். ஆனால், அவரது மற்றொரு கல்வி- இராம காதையைப் பற்றிய கல்வியறிவு-ஊன்றி நோக்கில் தென்படும்.

ஆதிகவி வான்மீகரின் இராமாயணமே பின்புள்ளார்க்கு மூலமாக அமைந்தது என்பது உண்மையே. கம்பரும் இதனை ஒப்பியே கூறினார். எனினும், இராம காதை பிற மொழிகளிலும் இருந்தன என்று கொள்ள இடமுண்டு. எடுத்துக்காட்டாக, இராமன் வில் வளைக்கு முன்பே கன்னிமாடத்திடை சீதையைக் கண்டமையும், இருவரும் மாறிப் புக்கிதயமெய்தியமையும் வெகுநயமாக, அழகாகக் கம்பரது காவியத்திலே நாம் காணலாம். ஆனால், இச்செய்தி, அவருக்கு வெகுநாள் முன்பே, ஆசிரியப் பாக்களால் அமைந்த ஒரு தமிழ் இராம காதையில் காணப்பெறுகின்றது என்ற உண்மையையும், இது போன்ற மற்றும் சில குறிப்புக்களையும் ''இராமாயணமும் தமிழ் வழக்குகளும்'' என்ற கட்டுரையிலே, காலஞ்சென்ற மகாவித்துவான் ஸ்ரீ மு. ராகவய்யங்காரவர்கள் காட்டியுள்ளார்கள். புண்டைய இலக்கிய நூல்களும் வழக்குகளும் தவிர இராம காதையைப் பற்றிய சில அரிய குறிப்புகள், வான்மீகத்தே காணாதவை, திவ்யப்பிரபந்தங்களில் காணப்பெறுகின்றன.

எனவே, இராம காதையைத் தமிழில் வடிக்கு முன், கம்பர் அக்காதை பற்றி வடமொழியிலும், பிற மொழிகளிலும், தமிழ் இலக்கிய நூல்களிலும், முக்கியமாக ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலும் உள்ளவை அனைத்தையும் நன்கு கற்றிருக்க வேண்டும் என்று கூறுதல் மிகையாகாது. இவற்றுள் திவ்வியப் பிரபந்தம், கம்பர் உள்ளத்திலே தோன்றிய இராம காதையை வெகுவாக உருவாக்கியுள்ளது என்று நிச்சயமாகக் கூறலாம்.

கம்பர் தமது காவியத்துக்கிட்ட பெயர் ''இராமாவதாரம்'' என்பதே.

**''நடையி னின்றுயர் நாயகன் தோற்றத்தின்**
**இடைநி கழ்ந்த இராமாவ தாரப்பேர்த்**
**தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை''**

என்ற அவரது அவையடக்கப் பாடல் இவ்வுண்மையை உரைத்து நிற்கும். ''கோன்வஸ்மின்'' என்று தொடங்கி, இத்தகைய குணங்களை உடைய புருடன் யார் என நாரதரை வினவித் தெரிந்து, அத்தகைய உத்தம புருஷன்

ஒருவன் சரிதம் கூறுவதாகவே வந்த வான்மீகம் போலன்றிப் பரம்பொருளின் அவதாரமாகவே தம் காப்பியத்தை அமைத்துக்கொண்டார் கம்பர் என்பது தெளிவு. நாயகன் 'தோற்றத்தில்' என்று பரம்பொருளின் பல்வகை அவதாரங்களைக் குறித்து, இடையில் வந்த 'இராமாவதாரப்பேர்' என்று இராம காதையைக் காட்டினார் கம்பர். வான்மீகரும் இராமன் பரம்பொருளின் அவதாரம் என்று குறித்துள்ளார் எனச் சொல்லப்படினும், அவ்வாறு அவர் குறித்தமை மறைபொருளாகவே காட்டப்பெற்றதாகக் கூறப்பெறுகின்றது. ஆனால், கம்பரது காவியமே அவதாரமாகத் தொடங்குகிறது. இப்பேருண்மையை மறந்து, கம்பரது காவியத்தைத் தாங்கள் கற்பதால், கம்பருக்கு ஏதோ கிரீடம் சூட்டுவது போல நினைத்து, அக்காவியத்தைப் பிற இலக்கிய நூல் கற்கும் பாணியில் கற்க முயன்று இடர்ப்படுவார் பலர். அதனால், பலவிடங்களில் கம்பரது கருத்தினை முற்றும் புரிய இயலாது அவரைக் குறை கூறவோ, அல்லது அவர் பாசுரங்களைத் திருத்த முற்படவோ, அன்றித் தள்ளிவிடவோ வேண்டிய நிலையில் சிக்கித் தாமும் கலங்கிப் பிறரையும் கலக்கமுறச் செய்ய முயல்வார் இல்லாமலில்லை. காவியக் கருத்தா அமைத்தபடியே அக்காவியத்தை ஆராய முற்படின் இத்தகைய இடர்ப்பாடுகள் நேர இடமிராது.

இராம காதையைப் பரம்பொருளின் அவதாரமாகக்கொண்டே காவியம் அமைக்க முற்பட்டவராதலின், அப்பரம்பொருளின் அடியார்களின் அருளிச் செயல்களில் ஈடுபட்டு, அவ்வாழ்வார்கள் வாக்கை அடிப்படையாகக் கொண்டு தமது காப்பியத்தை அவர் இயற்றுதல் இயல்புதானே! ஆகையால், ஆதிகவியின் நூலில் காணாத சில நிகழ்ச்சிகள், அதனின்றும் மாறுபட்ட சில நிகழ்ச்சிகள் கம்பரது காவியத்திலே காணப்பெறுகின்றமைக்கு மூலம் வேண்டின் நாம் திவ்யப் பிரபந்தங்களுக்குச் செல்ல வேண்டும். இங்ஙனம் பிரபந்தம் கொண்டே பொருள் காணவேண்டிய பல இடங்கள் கம்பரது இராம காதையில் உள. அவற்றுள் மிக நுணுகி நோக்க வேண்டியவையாயுள்ள சில பகுதிகளை இங்குக் காண்போம்.

கைகேயிக்கு வரம் கொடுக்க ஒருப்பட்ட தயரதன் ''நிச்சயம் இவ்வரங்களிரண்டையும் உனக்குத் தருவேன். ஐயுற வேண்டா,''

**'வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை என்றான்'**

எனக் கூறியதாகக் கம்பர் காட்டுவார். கைகேயியைச் சுட்டி, ''இராமன் உன் மைந்தன்'' எனக் கூறுவது எங்ஙனம்? இராமன் கைகேயியின் மைந்தனன்றே! கோசலை குமரனல்லவா? எனினும், பெற்றவள் கோசலையாயினும் பேணி வளர்த்தவள் கைகேயிதான் என்னும் பொருளில் கூறியிருக்கலாமல்லவா?

**''தாய்கையில் வளர்ந்திலன் வளர்த்தது தவத்தால்**
**கேகயன் மடந்தை''**

என்று நகர மக்கள் கூறுவதாகக் கம்பர் காட்டவில்லையா என்று ஒரு பதிலிறுக்க முற்படலாம். ஆனால்,

**''பிணங்குவான் பேரிடர் பிணிக்க நண்ணவும்**
**உணங்குவா யல்லைநீ உறங்குவாய்''**

என்று தன்னைக் கடிந்து கூறிய கூனியை நோக்கி,

**இராமனைப் பயந்த எற்கிடரு ண்டோ?''**

என்று கைகேயி பதில் வினவியதாகக் கம்பர் கூறுவார். இதில் 'பயந்த' என்ற சொல்லை நோக்க வேண்டும். அச்சொல் 'பெற்ற' என்றே பொருள்படும். இச்சொல்லைக் கூற உரியவள் கோசலை ஒருத்திதானே!

**''கருமுகிற் கொழுந்தெழில் காட்டும் சோதியைத்**
**திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை''**

என்றும்,

**''இருங்கடகக் கரதலத்திவ் வெழுதரிய திருமேனி**
**கருங்கடலைச் செங்கனிவாய்க் கோசலைஎன் பாள்பயந்தாள்''**

என்றும், இராமனைப் பயந்தவள் கோசலை என்று கம்பர் கூறியுள்ளாரே, பின் ஏன் இங்கு தயரதன் வாக்காக ''உன் மைந்தன்'' என்றும், கைகேயி வாக்காக ''இராமனைப் பயந்த'' என்றும் கூறினர்? தயரதன் 'நம் அருமை மைந்தன்' என்னாதே 'உனது வளர்ப்புச் செல்வப் பிள்ளை' என்னாதே 'உன் மைந்தன்' என்றான். அதற்கு 'நீ பெற்ற மகன்' என்னும் பொருளதே! அதே போன்று 'இராமனைப் பயந்த எற்கு' என்ற கைகேயியின் வாக்கும் 'இராமனைப் பெற்றெடுத்த எனக்கு' என்றே பொருள்படும்.

எனவே, கோசலையைக்காட்டிலும் தனக்கே இராமனைப் பெற்ற உரிமையுண்டென்று கைகேயி பாராட்டி வந்தாள் என்பதும், அதனைத் தயரதனும் ஒப்பினான் என்பதும் போதரும். தேவகி பெற்ற கண்ணனை அசோதை பெற்ற பிள்ளையாக உலகம் ஒப்பியது போன்றது இது.

**''என்ன நோன்பு நோற்றார் கொலோ இவனைப்**
**பெற்ற வயிறுடையார்**
**என்னும் வார்த்தை எய்து வித்த இருடி**
**கேசா !''**

என்று அசோதை கூறியது போன்றே இங்கும், கைகேயி இராமனைத் தான் பெற்றதாகவே உரிமை பாராட்டினாள்; தயரதனும் அதனை முற்றிலும் ஒப்பினான். இதுமட்டுமன்று, இராமனும், வனம் புகுவதனின்றும் தன்னைத் தகைந்த வசிட்டனிடம்,

**''ஏன்றனன் எந்தை இவ்வரங்கள் ஏவினாள்**
**ஈன்றவள்; யான் அது சென்னி யேந்தினேன்''**

எனக் கைகேயியைக் குறித்துத் தன்னை ஈன்றவளாகவே கூறுவதாகக் காட்டினார் கம்பர்.

இங்ஙனம், தயரதன் ''உன் மைந்தன்'' என்றும், கைகேயி ''இராமனைப் பயந்த எற்கு'' என்றும் கூறியதாகக் கம்பர் காட்டியமைக்கு மூலம், குலசேகரர் அருளிய ''வன்றாளின் இணை வணங்கி'' என்ற பாசுரத்திலே தயரதன் வாக்காக வரும் 'உனைப்பயந்த கைகேயி' என்ற வாசகமே. இவ்வாக்கு, கைகேயி பாராட்டிய உரிமையையும், அதனை ஒப்பியேயிருந்தான் தயரதன் என்பதையும் காட்டும். இதில் வரும் ''உனைப்பயந்த'' என்ற இணைமொழியைப் பகுத்து, 'உன்' என்பதனை 'மைந்தன்' என்பதோடிணைத்து, ''உன் மைந்தன்'' என்ற தயரதன் வாக்காகவும், 'பயந்த' என்ற சொல்லை 'இராமனை' என்பதோடு இயைத்து, அத்தயரதன் குறித்த கைகேயியின் வாக்காகவும் அமைத்தார் கம்பர். குலசேகரரின் ''உனைப் பயந்த கைகேயி'' என்ற மொழியாட்சிக்கு வியாக்கியானமிட்டமை போன்றமைந்தன கம்பரின் வாக்குகள் என்று கொள்வதில் தவறில்லையன்றோ! கைகேயியின் இத்தகை உரிமையை மதித்தே, தன் தாய்மார்கள் மூவரையும் நேருமிடத்தெல்லாம் இராமன் முதலில் கைகேயியை வணங்குகிறான்.

**''கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம்**
**தாயினும் அன்பொடு தாழ்ந்து வணங்கி**
**ஆயதன் அன்னை அடித்துணை சூடி''—**

என்றும்,

**''கைகயன் தனயை முந்தக் காலுறப் பணிந்து**
**மற்றை**
**மொய்குழ லிருவர் தாளும் முறைமையின்**
**வணங்கும் செங்கண்**
**ஐயனை''**

என்றும் கம்பர் காட்டுவர்.

சூர்ப்பணகை அரக்கி. இராமன் முன் அவள் தோன்றுங்கால் தன் அரக்க வடிவுடனேயே தோன்றினாள் என ஆதி காவியம் கூறும். அங்ஙனம் தோன்றிய அரக்கியின் உருவையும் இராமன் வடிவையும் அங்க அங்கமாக எதிரெதிர் காட்டி, இரண்டினுமுள்ள முரணை வெகு நயம்படக் காட்டுவர் முனிவர். ஆனால், கம்பரோ ''கோமகனும் அத்திசை குறித்தனன் விழித்தான்'' என்று, இராமன் சூர்ப்பணகையின் அழகு வடிவைக் கண்டு வியந்து, கண்ணிமை கூட இயலாது போனான் என்றும், வாய்விட்டு ''அழகுக்கு அவதியுண்டோ'' என்று கூறியதாகவும் காட்டுவர். இங்ஙனம் இருவர் கூற்றையும் ஒத்து நோக்குவார்க்குக் கம்பரது சூர்ப்பணகை வான்மீகரின் சூர்ப்பணகையல்ல என்ற முடிவுக்கு வர வெகு நேரம் தேவையில்லை. எவ்வகையிலும் இரு சூர்ப்பணகைகளையும் இணைத்து ஒன்றாக்க இயலாது. இணைக்க முயல்வது பரிகாசத்துக்கே இடமாகும். இத்துணையளவு முற்றிலும் வேறுபட்ட உருவத்தோடு சூர்ப்பணகையை எப்படிக் காட்டுகிறார் கம்பர் என்ற வினா, இயல்பிலே எழக்கூடியது. காவிய ரசனைக்காகவும், நகைச்சுவைக்கு ஒரு களனாகவும் கம்பர் இங்ஙனம் அமைத்திருக்கலாம் என்று பண்டிதர் பலர் எளிதாகக் கூறிச் செல்வர். ஆனால், அதுதானா உண்மை? மேற்கண்ட காரணங்களுக்காகச் சூர்ப்பணகையின் உருவை மாற்றவேண்டிய அவசியமில்லையே! பின் எப்படிக் கம்பன் துணிவுடன் சூர்ப்பணகையை ஒரு பேரழகியாக நிறுத்துகிறார்? இதற்கு விடை காண நாம், குலசேகரர் பத்துப்பாடலில் கூறிய இராமகாதைச் சுருக்கை நோக்க வேண்டும்.

**''வலிவணக்கு வரைநெடுந்தோள் விராதைக்**
**கொன்று**
**வண்டமிழ்மா முனிகொடுத்த வரிவில்**
**வாங்கிக்**
**கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கிக்**
**கரனோடு தூடணன் தன் உயிரை வாங்கி''**

என்பது குலசேகரர் வாக்கு. 'விரூபாக்ஷி' என வான்மீகி கூறிய சூர்ப்பணகையை ''தலை வணக்கு நோக்கி'' யாக, மானும் வெட்கித் தலை குனியும்படியான கண்ணழகியாகக் காட்டினார் சேரலர் கோன். இந்திரியங்களில் தலையாய கண்ணினை வருணிக்கும் முறையிலே, வான்மீகச் சூர்ப்பணகையினின்றும் முற்றிலும் மாறுபட்ட ஒரு அழகியான சூர்ப்பணகையைச் சுட்டிச் சென்றார் குலசேகரப் பெருமான். அந்த ஒரு குறிப்பாகிய சிறிய பொறியைத் தன் கற்பனைக் காற்றினால் ஊதிப் பரமனும் கண்டு வியக்கும் அழகியாக அவ்வரக்கியை வடித்தார் கம்பர்.

இவ்விரண்டு எடுத்துக்காட்டுக்களும், பாத்திர அமைப்பில் கம்பர் திவ்யப்பிரபந்தங்களை ஆதாரமாகக்கொண்டு அமைத்தார் என்பதைக் காட்டும். இதுபோல, நிகழ்ச்சி முறையிலும் எவ்வாறு கம்பர் அருளிச் செயல்களை அடிப் படையாகக்கொண்டு கூறினார் என்பதைப் பார்ப்போம்.

தேவர்தம் குறை தீர்க்கப் பரமனை விஷ்ணு அவதரிக்க வாக்களித்த விவரம் ஏதும் வான்மீகத்தில் இல்லை. விஷ்ணுவே ராமனாக அவதரித்தான் என்பதே சில குறிப்புகளால் பெற முடிகின்றது ஆதிகாவியத்திலே. அதே போன்று, அவனைப் பரம்பொருளாக ஓரிருவர் கூறியதாக மட்டும் காண முடிகிறது. ஆனால், இராம காதையை இராமாவதாரம் என்றே பெயர் சூட்டித் தொடங்கிய கம்பர், திரு அவதாரப் படலத்தில், தயரதன் மகப்பேறு வேண்டுவதற்கு நெடுங்காலத்துக்கு முன்பே, வானுலகில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றை, வசிஷ்டர் மனக் கண்ணில் கண்ட காட்சியாகக் காட்டுகிறார். அந்நிகழ்ச்சி முற்றிலும் இங்கு விஷயமன்று. அது நிகழ்ந்த முறையைக் கம்பர் காட்டியமை அறிஞர்க்குப் பெருவிருந்தாகும்.

அமரர்கள் பரமனோடு கடுவமர் கண்டனைக் கண்டு அபயம் வேண்ட, நீலகண்டனும் தன் செயலின்மையைக் கூற, அனைவரும் 'கருமுகிலென வளர்கருணையங்கடல், பொருதிடர் தணிக்கிலுண்டெனும் புணர்ப்பினராய்ப் பரந் தாமனைத்' துதிக்க முற்படுகின்றனர். இங்ஙனம் தேவர்கள் நாராயணனை வேண்டுவதும், அவன் அவர்கள் கூப்பீடு கேட்பதும் அவனது வியூக (அவன் பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள) நிலையிலேயாதலின், அவ்வுண்மையைக் காட்டவே கம்பர்,

**''திரைகெழு பயோததி துயிலும் தெய்வவான்**
**மரகத மலையினை வழுத்தி நெஞ்சினால்**
**கரகம லம்குவித் திருந்த காலையில்''**

என அவனது பாற்கடற்பள்ளியைச் சுட்டிக் கூறினார். பரமன் கலுழன்மேல் இவர்ந்து 'திருவொடும் மருவித்' தோன்றினன் என்றார் கம்பர், பிராட்டி முன்னாக அவனைப் பற்ற வேண்டும் என்பது காட்ட. அவன் புள்ளிவர்ந்து நின்ற நிலையிலே அமரர் தங்கள் குறையைக் கூறவில்லை. பரமனை வணங்கி, மகிழ்ச்சியில் திளைத்து நிற்கின்றனர். பரமன் கலுழன் தோள் நின்றும் இழிகிறான். அந்நிலையிலும் அமரர் தம் குறை கூறவில்லை. எம்பெருமான் அடியிட்டுச் சென்று, வானுயர் மண்டபமொன்றிலே இடப் பெற்ற அரியாசனத்தைக் கிட்டி, அதில் ஏழுலகும் தன் தனிக்கோல் செல்லவிருக்கும் பாணியில் வீற்றிருக்கிறான்.

**''சென்னிவான் தடவு மண்டபத்துச் சேர்ந்தரி**
**துன்னுபொற் பீடமேல் பொலிந்து தோன்**
**றினன்''**

என்பது கம்பர் வாக்கு.

பின்னர், விதியும் விண்ணுளோரும் அரக்கர் கொடுமை கூற, பரமன் மேல் வினவுதற்கிடமின்றி, இதழியந் தெரியலான் பரமனை நோக்கித் தாம் கொடுத்த வரங்களே தங்களுக்கு எமனாக விளைந்தமை கூறி, அபயம் வேண்டுகிறான் என, நிகழ்ச்சி முறை கூறப்பெறுகின்றது. அமரர்கள் பரமன் தோன்றியவுடனேயோ, அன்றி அவன் கருடன் தோள்நின்றிழிந்து தங்கள் குழுவோடு இருந்த காலையிலோ தம் குறை கூறாது, ஏன் அவன் பீடம் பொலிய அமர்ந்த பின் கூறினர் ? அது மரியாதைக்காக என்று எளிதில் கூறிவிடலாம். பொருத்தமான விளக்கமுங்கூட. ஆனால், உண்மை அதுவா ?

விண்ணவர் தசமுகன் அழிவை வேண்டி நின்றனர். அப்போதுதான் அவர் பழி நீங்கும். எனவே, பரமன் இராவணனை அழிப்பதாக வாக்களித்தால், அவ்வாக்கு அவனும் எக்காரணத்தையிட்டும் கழிக்க முடியாதபடி இருத்தல் வேண்டுமென விரும்புகின்றனர் தேவர். இப்பேருண்மைதான் இதில் பொதிந்து கிடக்கின்றது. அவ்விதந்தான் அவன் அறுதியிட்டாக வேண்டுமா, அங்கியிட்டால்தான் நிச்சயமா என வினவலாம். இதற்கு விடை வேண்டுமானால் நாம் ஆண்டாளின் பாடல் ஒன்றைப் பார்க்க வேண்டும்.

'மாரி மலைமுழைஞ்சில்' என்ற திருப் பாவைப் பாடலின் இறுதியில்,

**"கோப்புடைய,
சீரிய சிங்கா சனத்திருந்து யாம் வந்த
காரியம் ஆராய்ந்தருள்"**

என ஆயர் மகளிர் வேண்டுகிறார்கள். இதற்கு வியாக்கியானமிட்ட வியாக்கியான சக்கர வர்த்தி பெரியவாச்சான் பிள்ளை "இந்த சிம்மாசனத்திலிருந்து நினைப்பிட்டதென்றால் அறுதியாயிருக்கை" என்று உரையெழுதினர். "தர்மாசனத்தில் இருந்தால் தோற்றிற்றுச் சொல்லவொண்ணாதிறே! இதுதான் தர்மாதி பீடமிறே! ராஜாக்கள் மெய்க்காட்டுக்கு இன்ன மண்டபத்திலே இன்ன ஆசனத்திலே இருந்து நினைப்பிட்டதென்றால் தப்பாதாப் போலே!" என்பது விளக்கவுரை. எனவே, ஆய்மகளிர் கண்ணனை அழைக்க, அவன் வந்து நின்ற நிலையிலேயே வந்த காரியம் என்னவென்று கேட்க, அப்பெண்கள் "இப்படிக் கேட்டால் போதாது. அதோ அந்த அரியாசனத்தே போய் இருந்து கேட்க வேணும்" என்று கூறினார்களாம். காரணம், அவ்வாசனத்தே இருந்து அவன் சங்கல்பம் செய்தால் அதை அவனாலும் மீற முடியாது என்பதனால்.

ஆண்டாள் பாடலில் உள்ள இந்த உட் கருத்தை உள்ளத்திலே தேக்கித்தான், தேவர் குறையை அரியாசனத்தே இருந்து கேட்டு அவ் வாதனத்திருந்தே,

**"வஞ்சகர் தந்தலை அறுத்து இடர் தணிப்பன்'**

என்று பரமன் அறுதியிட்டதாகவும் காட்டினார் கம்பர். இதனை மீண்டும் வலியுறுத்துகிறார் கம்பர். யுத்த காண்டத்திலே, இராவணன்பால் தூதுவன் ஒருவனை அனுப்பி,

**"............ஏந்திழை யாளை விட்டுத்
தன்னுயிர் பெறுதல் நன்றோ அன்றெனில்
தலைகள் பத்தும்
சின்னபின் னங்கள்செய்யச் செருக்களம்
சேர்தல் நன்றோ"**

எனக் கேட்டு வருதல் நலமென நினைக்கிறான். வீடணனும் சுக்கிரீவனும் அதற்கு ஒப்புகின்ற னர். ஆனால், இலக்குவன் (பரமனது பாயலின் அவதாரம்) ஒப்பவில்லை. பொதுவாக அண்ண னிடம் இராவணன் இழைத்த ஒன்பது வித அபராதங்களைக் கூறுகிறான். அதில் கடைசி யாகக் கூறப்பெறுவது, பரமனும் எளிதிலே பொறுக்க முடியாத பாகவத அபசாரமாகிய சடாயுவின் மரணம். அவற்றை அடுத்து, மனித அவதாரமான நிலையில் கடற்கரையில் வீடணற் களித்த வாக்கு. "இவற்றையெல்லாம் அண்ணா, நீ உன் சதுரப்பாட்டினால் தட்டிக் கழித்துவிட முடியுமானாலும் உன்னாலும் தட்ட முடியாத ஒரு சூளுறவு இருக்கிறதே!" என்று அண்ண னுக்கு உணர்த்துகிறான். பிறர் தெரிந்துகொள்ள முடியாமல் அவன் மட்டுமே உணரும் வகை யில்,

**"முன்னம் சூளுறவு என்னும் தோன்றால்"**

"ஏ அவதார புருஷனே! அவதாரம் செய்ய நினைக்குமுன் தேவர்களுக்கு அரியாசனத்தி லிருந்து கொடுத்த வாக்கு என்னுவது! அது உன்னாலும் தட்டிக்கழிக்க முடியாத வாக்கல் லவா? "வஞ்சகர்தம் தலையறுத்து இடர்தணிப் பதாக அல்லவா அறுதியிட்டாய்" என நினைப் பூட்டி, மற்றவர் அதனை ஆராய இடமின்றி மற்றும் சில வாசகம் கூறிச் 'சிறந்தது போரே' என்றான்.

'சேவகன் முறுவல் செய்தான்' என்றார் கம்பர். 'எங்கே அவதார அவசியத்தை மறந்து விடுவோமோ என்று அஞ்சித் நமது பாயல் நம் சங்கல்பத்தை நமக்கு நினைவூட்டுகின்றானே! நம் சங்கல்பத்தில்தான் அவனுக்கு எவ்வளவு அக்கறை' என்ற பூரிப்பில் எழுந்த முறுவல் அது. தம்பி பிறர் ஐயுறுதவாறு கேட்ட கேள் விக்கு அந்தப் பாணியிலேயே விடையிறுக்கிறான் ஐயன்.

'அயர்த்திலன் முடிவும் அஃதே' என்று, அவனது முன்னம் சூளுறவென்னும் என்பதற்கு விடை கூறிப் பின் அவன் பிறர் உள்ளங்களை வேறு பாதையில் ஈர்த்தது போன்று, தானும் லோகாபிராமமாக "ஆயினும் அறிஞ ராய்ந்த நயத்துறை நீதி நூலின் நாம்துறந் தமைதல் நன்றோ" என்றும், மற்றும் பலவும் கூறி முடிக் கிறான் இராமன்.

முன்னம் சூளுறவு என்பது,

**"ஆரறத்தி னோடன்றி நின்றாரவர்
வேரறுப்பன்"**

என்று தண்டகவனத்து முனிவர்களிடம் கூறி யதைக் குறிக்கலாமல்லவா என்று கேட்கலாம். முனிவர்பால் செய்த சூளுரை "அறத்தினோ டன்றி நின்றாரைவேரறுப்பன்' என்பதே. அன்றி, நின்றார் திருந்தி அறத்தினோடு ஒன்றி நிற்க

ஒருப்பட்டால் வேரறுக்க வேண்டியதில்லையே ! அங்கதனிடம் தூதனுப்பியபடி இராவணன் தையலைவிட்டு அவன் சரணம் தாழ்ந்தால் வேரறுக்கத் தேவையில்லையே. அவன் அறத்தோடு ஒன்றிவிடுகிறான். முனிவர்பால் அளித்த சூளுறவும் பொய்க்காது. ஆனால், இங்கே இராமன் கூறுவது 'முடிவும் அஃதே' என்பதல்லவா? இலக்குவன் உள்ளத்தே எண்ணியிருந்த 'இராவணன் வதம்' அதுதான் முடிவு என்றல்லவா இராமன் கூறுகிறான். பின் தூது எதற்கு என்ற வினா எழுமல்லவா? அது, அவன் தோன்றிய அரச தருமத்தை ஒட்டிச் செய்த செயல். உலகில் உள்ள ராஜநீதியைத் தயரத குமரன், வசிஷ்ட சீடன் என்ற முறையில் பின்பற்றிச் செய்யப்பட்ட ஒன்று.

அவதாரம் செய்த பரமன், தன் அவதார காரணத்தை மறந்து செயல்படவில்லை. மனித்த அவதார முறையில் யாவும் நடந்தனவாயினும், தன் பரத்துவத்தை முற்றிலும் மறந்துவிடவில்லை என்பதற்குக் கம்பனில் பல சான்றுகள் உள. ''உலக வாழ்விலே, உலக தர்மத்திலே ஊன்றி உன் சூளுறவை மறக்கிறாயா ? ஐயனே !'' என இலக்குவன் நினைவூட்டுகிறான். ''மறக்கவில்லையடா, அப்படியேதான் முடியும்'' என்று பதிலளிக்கிறான் இராமன்.

கடைசியாக, மிக நுணுக்கமானதொன்றைக் காண்போம். இராவணன் வதைப்படலத்திலே வரும் பாடல் ஒன்று.

> **''அக்க ணத்தில் அயன்படை ஆண்டகை**
> **சக்கரப் படையொடும் தழீஇச் சென்று**
> **புக்க தக்கொடி யோனுரம் பூமியும்**
> **திக்க னைத்தும் விசும்பும் திரிந்தவே.''**

(அயன் படையை மூலமந்திரம் தன்னொடும் மூட்டுகின்றான் இராமன்.) ''அவ்வயன் படை வானும் மண்ணும் சுழல, இராமனது சக்கரப் படையோடும் தழுவிச் சென்று, இராவணன் மார்பிடைப் புக்கது'' என்பது பாடலின் பருப்பொருள்.

இராம காதையில் பரமனின் பஞ்சாயுதங்களில் எதுவும் பயன்பட்டதாக ஆதிகவி கூறவில்லை. வேறு இராமாயணங்களிலும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால்,கம்பரோ, அனைத்தையும் அழிக்கும் என்று கூறப்பெறும் அயன் படை, சக்கரப்படைக்கு முன்சென்று வழியமைக்க இராவணன் உரம் புகுந்தது எனக் கூறுகின்றார். எங்ஙனம் ?

திருமாலின் திருக்கையிலுள்ள அறவாழிப் படை, அவன் எப்போது, யாரை முடித்துவிட வேண்டும் எனத் தன் திருவுள்ளத்திலே இறுதியாக நினைக்கின்றானோ அப்பொழுதே, அவனுள்ளம் கருதிய இடத்துச் சென்று, அவனது நினைப்பை நிறைவேற்றி, மீண்டும் அவன் வலத் திருக்கரத்தில் வந்தமரும் என்பது நூற்கொள்கை. இதுவே அத்திருவாழியின் இயல்பு. இதனையே,

> **''கைந்நின்ற சக்கரத்தன் கருதுமிடம்**
> **பொருது''**

என்று நம்மாழ்வார் கூறினார். 'கருதும் இடம் பொருது கைந்நின்ற சக்கரத்தன்' என்று பொருள்கோள்.

பிராட்டி இராவணனை நோக்கி, ''உனது பாழுடல்,

> **''பத்துள தலையும் ; தோளும் பலபல; பகழி'' தூவி**
> **வித்தக வில்லினாற்குத் திருவினை யாடற் கொத்த**
> **சித்திர இலக்க மாகும்''**

எனக் கூறினாளல்லவா? அவ்வாக்குப் பழுதாகாமல்,

> **''............... மாயனிராவணன் மேல் சரமாரி**
> **தாய்தலை அற்றுஅற்று வீழத்தொடுத்து''**

ஐயன் முதலில் விளையாடினான். 'விளையாட்டு இவ்வளவு போதும். இனி இவனை முடித்துவிட வேண்டியதுதான்' எனப் பரமன் என்ற நிலையில் இறுதியாக நினைக்கிறான் ; உடனே திருவாழி செயல்படுகின்றது. அவதாரமூர்த்தி என்ற நிலையில் இராமன், அயன்படையை அதற்குரிய மூலமந்திரத்தோடு மூட்டி எய்கிறான். முன் சென்ற சக்கரப்படை இராவணன் உரத்தை அறுக்க, அதனைத் தழுவிச் சென்ற அயன்படை தங்குதடையின்றி உள்ளே நுழைகின்றது. இராவணன் வீழ்கிறான். கம்பரின் இப்பாடல் நம்மாழ்வாரின் வாக்கை அடிப்படையாகக் கொண்டே எழுந்தது.

மேற்காட்டியவையெல்லாம், திவ்வியப் பிரபந்தங்களை ஊடுருவி நோக்கி,அவற்றில் வெளிப்படையாகவும் மறைபொருளாகவும் வந்த பேருண்மைகளையெல்லாம் உள்ளத்திலே தேக்கிக்கொண்டே இராமாவதாரக் காவிய

அரங்கையும் சமைத்துப் பாத்திரங்களையும் வடித்தார் கம்பர் என்பதைக் காட்டும்.

கம்பர் பயபக்தியோடு இராமனை உளத் திருத்தி, தன் கதையை அவனே நிகழ்த்திக் காட்டக் கண்டு, தனது இராமாவதாரத்தைக் கூறினர் என்றுகூடச் சொல்லலாம். ''செவ்வழி உணர்வு கூறினர் தோன்றச் செப்பினம்'' என்ற கம்பரது வாக்கே இக்கூற்றை ஓரளவு உணர்த்தி நிற்கும். இங்கே திருமங்கை ஆழ்வார் ''உணர் வெனும் பெரும்பதம் தெரிந்து'' என்றவிடத்து, உணர்வு என்பது எப்பொருளதோ அதே போன்று கொள்ள வேண்டும். இறைநிலைக் காட்சி என்று கொள்ளலாம். கம்பர் ஒரு ராம பக்தனகவேதான் இராமாவதாரத்தைப் பாடி ஞர் என்பதற்கு ''பத்தர் சொன்னவும்'' என்ற அவரது வாக்கே சான்று. இத்தகைய உளப்பாங் கோடு அவரது இராமாவதாரத்தை நோக்கும் அறிஞர்க்கு இன்னும் பற்பல சீரிய புதையல் இலக்காகும் என்பதில் ஐயமில்லை.



B

# காலமும் கணக்கும் நீத்த காரணன்

அருட்பா S. R. தங்கவேலு

கம்பர் என்னும் தெய்வ மாக்கவி, எடுத்த எடுப்பிலேயே இராமனது எளிமையிலும் இனிமையிலும் ஈடுபட்டுவிடுகின்ருன். ஏன், தனது உள்ளத்தையே முழுதுமாக இராம னிடம் பறிகொடுத்துவிட்டான். வான்மீகி யினது நிலே அவ்வண்ணமன்று. இராமனே ஒரு சாதாரணமான அரசகுமாரனுகவே முதலில் காண்கின்ருர் ; பல நற்குணங்களுக்கு உறை விடமான ஒரு உத்தம மனிதனுகக் காண கின்ருர். ஆனல், காவிய ஓட்டத்திலே, தம் வயமிழந்து, இராமனது அரும்பெருங் குணங் களிலே ஈடுபட்டு, அவனேத் தம்மை ஆண்டு கொண்ட ஒரு பெருந்தெய்வமாகவே கருது கின்ருர்.

ஆம் ! வான்மீகி இராமனே ''லோக நாயக ளு''கக் கொண்டார். ஆனல், கம்பநாட்டாழ் வார் இராமனேத் ''தெய்வ நாயகனுகக்'' கொண்டார்.

உலக காவியங்களாகிய ஓமரின் ''இலி யாது'',''ஓதேகி''; விர்ஜிலின் ''ஏநீது'' முதலி யவற்றில் காவிய நாயகர்கள் மிக அற்புதமாகச் சிருஷ்டிக்கப்பட்டுள்ளார்கள். இருப்பினும், கம்பரது ''இராமன்'' எல்லா அம்சங்களிலும் வானேங்கி நிற்கின்ருன். இராமனே அறத்தின் மூர்த்தியாக, நடையில் நின்றுயிர் நாயகனுக, ஓவியத் தெழுதவொண்ணு உருவத்தானுகக் கம்பர் காட்டும் அழகோவியங்கள் அற்புதம் ! அற்புதம் ! !

வைணவத்தின் மூல தத்துவங்களில் ''சௌலப்யம்'', ''ஔஸீல்யம்'', ''பரத்வம்'', ''பிரபத்தி'' ஆகிய நான்கும் முக்கியமானவை களாகும். இறைவன் எளியனுகவும், இனிய னுகவும் இருப்பதுமட்டுமன்றி அவனே மூல முதற்பொருளாயும் சத்தியப் பொருளாயும் நித்தியப் பொருளாகவும் விளங்குகின்ருன். அவன் கண்ணுக்கு மட்டுமல்ல, கருத்திற்கும் இனியனுகின்ருன். அவன் மூலப் பொருளாத லால்தான் அன்று முதலேவாய்ப்பட்ட கஜேந் திரன் இறைவனே 'நாராயணு', 'கோவிந்தா' என்றுஅழைக்காமல், ''ஆதிமூலமே'' என்று ஓல மிட்டது. ''பிரபத்தி'' அல்லது ''சரணுகதித் தத்துவம்'' வைணவத்தின் அடிநிலேக்கொள்கை. இந்நான்கு தத்துவங்களின் விரிவுரையே இராம காதையென்று சொன்னல் மிகையாகாது.

''பிரபத்தி'' நெறியைக் கம்பநாட்டாழ் வார் மகோன்னதமான வளத்தோடும் வனப் போடும் சித்திரித்துக் காட்டுகின்ருர். நம்மாழ் வார் இந்நெறியை விளக்கும்முகத்தான் ''ஆறு எனக்கு நின் பாதமே சரணுகத் தந்தொழிந் தாய்' என்று அருள் எக்காளம் ஊதுகின்ருர். இச்சரணுகதித் தத்துவத்தின் சீர்மையையும் ஏற்றத்தையும் முழுதுமாக மக்களுக்குச்சொல்ல வேண்டுமென்று கம்பர் எண்ணினர். பல கதா பாத்திரங்களின் மூலமாக, பல அறங்களேயும், நெறிகளேயும் முரசு கொட்டும் இம்மாபெரும் புலவன் இச்சரணுகதித் தத்துவத்தின் பெருமை யை இராமபிரான் திருவாக்காகவே சொல்லு கின்ருர்.

**''பிறந்தநாள் தொடங்கி யாரும்**
**துலேபுக்க பெரியோன் பெற்றி**
**மறந்தநாள் உண்டோ ? என்னேச்**
**சரண்என வாழ்கின் ருனேத்**

**துறந்தநாள் இறந்த நாள்ஆம்,**
**துன்னினுன் சூழ்ச்சி யாலே**
**இறந்தநாள் அன்ருே, என்றும்**
**இருந்தநாள் ஆவது' என்ருன்''**
*(யுத்த காண்டம்)*

''அடைக்கலம் அடைந்த ஓர் அஃறிணைப் பொருளாகிய ஒரு புருவிற்காகத் தனது உடலை அறுத்துத் தானும் தராசில் ஏறிய சிபிச் சக்கர வர்த்தியை இம்மனித குலம் என்றேனும் மறப் பதுண்டோ? எனவே, வீடணனுக்கு அடைக் கலம் அருளுவதன் மூலம் தனக்குச் சாவே நேரினும் அந்நாளே நற்பெரு நாள்'' என்பது இராமபிரானது உறுதிப்பாடு.

இச்சரணுகதி நெறியை ''மார்ச்சால நெறி'' என்பர். பெண் பூனையானது தானெங்கெங்கே போகுமோ அங்கெல்லாம் தனது சிறுகுட்டி யைச் கௌவிச் செல்லுமாப்போல, தன் எண்ணம், பேச்சு, செயல் ஒன்றுமின்றி எல்லா வற்றையும் இறைவனுக்கு உடைமையாக்கிவிடு வதே சரணுகதித் தத்துவத்தின் முழு இலக்கண மாகும். பன்னிரு ஆழ்வார்களது அருளிச் செயல்களில் இப்பிரபத்தி நெறி அழகொடு முழுமை பெற்று விளங்குகின்றது. எனவே தான், மகாகவி கம்பர் ''கம்பநாட்டாழ்வார்'' ஆகின்ருர்.

கம்பர் முதலாவதாக, இராமனது வடிவழ கிலே ஈடுபட்டுவிடுகிருர். இத்திவ்ய சௌந்தர் யத்தை எங்கெங்கு எவ்வளவு பெருமிதத்தோடு சொல்ல வேண்டுமோ அவ்வளவு இரும்பூதோடு சொல்லி அனுபவிக்கின்ருர்.

இதோ ஓர் அற்புதத் திருப்பாட்டு :

**''தயரதன் புதல்வன் என்பார் ;**
**தாமரைக் கண்ணன் என்பார் ;**
**புயல்இவன் மேனி என்பார் ;**
**பூவையும் பொருவும் என்பார்;**
**மயல் உடைத்து உலகம் எல்லாம்**
**மானிடன் அல்லன் என்பார்**
**கயல்பொரு கடலுள் வைகும்**
**கடவுளே காணும் என்பார்''**
*(பால காண்டம்)*

இத்திருப்பாட்டிலே கம்பநாட்டாழ்வார் மண்ணையும் விண்ணையும் இணைத்துவிடுகின் ருர். தமது எண்ணத்தை அப்படியே கொட்டி விடுகின்ருர்; பரமபத நாதனே மானிட உருக் கொண்டு கால் தேய இம்மண்ணில் நடக்கின் ருன் என்ற எண்ணத்திற்கு இங்குக் கால்கோள் விழா நடத்துகின்ருர். இவ்வெண்ணம் அனு மன் மூலமாக பூர்ணமாகிப் பூத்துக் குலுங்கு கின்றது. இராமனது வடிவழகிலே தமது மனத்தைப் பறிகொடுத்த கம்பநாட்டாழ்வார், தமது எண்ணங்களின் முழுக் கற்றைகளையும் பலபலவென, இதோ உதிர்த்துவிட்டார். மானிடன் இதற்குமேல் சொல்லவியலாது ! வார்த்தைகளுமில்லை ! !

இப்பாட்டு கவிக்கூற்ருகவும் அமைந்து விடுகின்றது:

**''வெய்யோன்ஒளி தன்மேனியின்**
**விரிசோதியன் மறையப்**
**பொய்யோஎனும் இடையாளொடும்**
**இளையானொடும் போனுன் ;**
**மையோ,மர கதமோ, மறி**
**கடலோ மழைமுகிலோ**
**ஐயோ இவன் வடிவென்பதோர்**
**அழியா அழகுடையான்''**
*(அயோத்தியா காண்டம்)*

இவ்வாருகக் கம்பநாட்டாழ்வார் தம்மைஇராம பிரான் ஆட்கொண்ட பெருங்கருணைப் பெருந் திறத்தை வாய்மணக்கப் பாடுகின்ருர்.

இத்திவ்யத் திருப்பாட்டு திருப்பாணாழ் வாரின் ஆனந்தத் திருப்பாசுரத்தை நினைப்பூட் டுகின்றது.

**''ஆல மாமரத்தினிலை மேலொரு பாலகனுய்**
**ஞாலமேழுமுண்டானரங்கத் தரலினணையான்**
**கோலமா மணியாரமும் முத்துத்தாமமும்**
**முடிவில்லதோ ரெழில்**
**நீல மேனி ஐயோ! நிறை கொண்டதென்**
**னெஞ்சினையே''**
*(திருப்பாணாழ்வார்)*

முன்னையவர் இறைவனை நேருக்கு நேர் கண்டு அனுபவிக்கின்ருர். பின்னையவர் அர்ச்சாவ தாரத் திருமேனியிலே உள்ளத்தைப் பறி கொடுக்கின்ருர்.

காவியம் மேலே செல்லச் செல்ல கம்பர் தமது இதய நாயகனது குணவழகையும், வீர வழகையும் என்ன பெருமிதத்தோடு சொல்லு வார் ! ஆம் ! பல பாத்திரங்களின் மூலமாகத் தான். இதிலும் ஓர் அலாதி அழகு ! சொல்ல

வேண்டிய கருத்தைப் பொருத்தமான பாத்திரத்தின் மூலமாகத்தான் சொல்லுவார்.

வேதவேதாந்தங்களும் உபநிடதங்களும் முழக்கும் தனிப்பெரும் உண்மையை ஆரண்ய காண்டத்திலே விராதன் துதியாக அமைக்கின்றார் கம்பர் பெருமான்.

**''தாய்தன்னை அறியாத கன்றில்லை;**
**தன்கன்றை**
**'ஆயும்அறியும் உலகின்தாய் ஆகின்; ஐய**
**நீஅறிதி எப்பொருளும்; அவைஉன்னை நிலை**
**அறியா**
**மாயைஇது என்கொலோ ? வாராதே வர**
**வல்லாய்!''**

பகவான் தனது லீலா விபூதியாலே இவ்வுலகை இயக்குகின்றான் என்பது இதன் உள்ளுறைப் பொருள்.

மேலும், தமது கருத்திற்கு மெருகும் அழகும் ஊட்ட நினைக்கின்றார்; ஆனால், ஒரு போராட்டம்; அழகைச் சொல்லவா ? குணத்தைச் சொல்லவா ? வீரத்தைச் சொல்லவா ? அல்லது மூன்றையும் ஒருசேரச் சொல்லவா ?

இதோ சொல்லியேவிட்டார், வாலியின் மரண வாக்குமூலமாக! அளந்த சொற்களாலே இவ்வகிலத்தையே அலசிவிட்டாரே இத்தெய்வ மாக்கவி!

**''அனுமன் என்பவனை ஆழி**
**ஐய!நின் செய்ய செங்கைத்**
**தனுவென நினைதி! மற்றென்**
**தம்பிநின் தம்பி யாக**
**நினைதி!ஓர் துணைவர் இன்னோர்**
**அனையவர் இலை ;நீ ஈண்டுஅவ்**
**வனிதையை நாடிக் கோடி !**
**வானினும் உயர்ந்த தோளாய்''**

*(கிட்கிந்தா காண்டம்)*

இங்கு கோசல நாட்டு வள்ளலது ''செங்கை'' தேஜோமயமாக விளங்குகின்றது; ''நின்தம்பி யாக நினைதி'' என்னும் நம்பிக்கை விண்ணப்பம் பரவசமூட்டுகின்றது. ''வானிலும் வளர்ந்த தோளாய்'' வீர முரசு கொட்டுகின்றது.

இராமனை முழுமுதற் காரணனாக உலகிற்குக் காட்ட வேண்டுமென்பது கம்பரது காவிய நோக்கங்களில் ஒன்று. இதற்கு மேலும் சொல்ல முடியாது என்று நினைக்குமளவிற்குச் சொல்லவும் வேண்டும். சொல்ல வேண்டிய வற்றை அழகுறத் தக்க பாத்திரத்தின் மூலமாகச் சொல்லவும் வேண்டும். இக்கருத்திற்கிசைய வருவோர், சொல்லின் செல்வனாகிய அனுமனைத் தவிர வேறு யார் இருக்க முடியும்? எனவே, மணிமுடியாகக் காகுத்தனது பரத்துவத்தை அனுமன் மூலமாகச் சொல்லுகின்றார்.

இராமனது பெருமையை அனுமன் இராவணனுக்கு உரைக்கும் நிலையிலே இத்திருப்பாட்டு அமைந்துள்ளது. இப்பொழுது பாட்டைப் பாருங்கள்; கம்பரது உள்ளத்தின் நீளத்தையும், அகலத்தையும், ஆழத்தையும் பாருங்கள்.

**''மூலமும் நடுவும் ஈறும்**
**இல்லதுஓர் மும்மைத் தாய**
**காலமும் கணக்கும் நீத்த**
**காரணன் கைவில் ஏந்திச்**
**சூலமும், திகிரி, சங்கும்**
**கரகமும் துறந்து, தொல்லை**
**ஆலமும், மலரும், வெள்ளிப்**
**பொருப்பும்விட்டு அயோத்தி**
**வந்தான்''**

*(சுந்தர காண்டம்)*

ஆம்! திரிமூர்த்திகளே ஒன்றாகி, அயோத்தியில் இராமனாக அவதரித்தார்கள் என்பது, அழகே அழகு!

கம்பநாட்டாழ்வார் தம்மையாட்கொண்ட இரகுகுல திலகனைப் பாடியது போன்று எங்கும் கண்டோமில்லை!

வடலூர் வள்ளலார் இராமனை எவ்வாறு தமது இதய கமலத்தில் வைத்துப் பூசித்தார் என்பதையும் இதோ பாருங்கள் :

**''காராய வண்ண மணிவண்ண கண்ண**
**கனசங்கு சக்ர தரநீள**
**சீராய தூய மலர்வாய நேய ஸ்ரீராம ராம**
**னெனவே**
**தாராய வாழ்வு தருநெஞ்சு சூழ்க தாமோ**
**தராய நமவோம்**
**நாராய ணாயநம,பரம ணாய நமகேச வாய**
**நமவே''**

*(திரு அருட்பா: ஸ்ரீராமநாமத் திருப்பதிகம்)*

தியாகப் பிரம்மம் ''ஸீதம்ம மாயம்ம ஸ்ரீராமுடு மாதண்ட்ரி'' — சீதை எனது தாய்; இராமபிரான் எனது தந்தை — என்று பாடிப் பரவுவது பிரேமையின் உச்ச நிலை!

# கவிச்சக்கரவர்த்தி கம்பன்

எஸ். மகராஜன்

மனித வாழ்க்கையை நடத்திவரும் மர்ம சக்திகள் எவை என்பதைக் கண்டு பிடித்த ஞானிக்கு எவ்வளவு தெளிவும் உறுதியும் கடவுள் பக்தியும் இருக்குமோ, அவ்வளவும் கம்பனிடத்திலிருப்பதை அவனுடைய ராமாயணத்தின் மூலம் நாம் உணர்கிறோம். உதாரணமாக, இரண்ய வதைப் படலத்தை எடுத்துக்கொள்வோம். அதிலே நாடகச் சுவைமிக்க காட்சியைக் கம்பன் தனக்கே உரிய தோரணையில் படைத்துக் காட்டுகிறான்.

படைத்தற்றொழிலைச் செய்கிற பிரம்மா இந்தக் காட்சியில் பரம்பொருளான விஷ்ணு மூர்த்தியைச் சந்தித்து அவரோடு ஒரு தத்துவப் பேருரையாடலை நடத்துகிறான்; இரண்யனுடைய மகன் பிரகலாதனுடைய வேண்டுகோளுக்கு இரங்கி, பரம்பொருள் பேரண்டத்தின் முகட்டைக் கீறிக்கொண்டு, சிம்மத் தலைகொண்ட மனித உருவத்தில் மண்ணுலகத்துக்கு இறங்கி வந்து, நாத்திகனை இரண்யனை உகிரால் வயிற்றைக் கீறி அழிக்கிறார்.

சம்ஹாரம் செய்தபிறகு நரசிம்மமூர்த்தி எல்லையற்ற சீற்றத்தோடு கர்ஜனை செய்து கொண்டு நிற்கிறார். வானநாட்டின் கோளரியைச் சமாதானப்படுத்தவேண்டுமே, அதற்காக இந்தக் காட்சியில் பிரம்மாவைக் கொண்டுவந்து நிறுத்துகிறான் கம்பன். அவ்வாறு பிரம்மாவை ஒரு நாடகப் பாத்திரமாகக் கொண்டுவந்து பரப்பிரம்மத்தின் முன்னால் நிறுத்துவதிலேயே ஒரு தனிக் கலைப் பாங்கும் துணிகரமான கற்பனையுமிருப்பதை நாம் கவனிக்கிறோம். மிக்க பக்தியோடு, ஆனால் கொஞ்சம் கிண்டல்தனமாக, பிரம்மா பேசுகிறான்: ''நரசிம்மம் என்ற உருவம் ஒன்றைப் படைத்துக்கொண்டல்லவா நீ இங்கு வந்திருக்கிறாய். ஆகவே, ஆதியில் நீதான் உன்னைப் படைத்திருக்க வேண்டும் என்ப ற்கு இதுவே சான்றாக இருக்கிறது. ஆனால், எம்பெருமானே, நீயே உன்னை ஒரு உயிருள்ள பொருளாகப் படைத்துக்கொண்டாயானால், உயிர்வர்க்கங்களையெல்லாம் படைப்பதற்கு என்று என்னை எதற்காக நீ படைத்தாய்? உயிரைப் படைக்கும் வேலையை எனக்கு நீ கொடுத்து விட்டு, நீயே உனக்கு உருவத்தைப் படைத்துக்கொள்வது என்றால், என்னுடைய அதிகார எல்லையில் நீ குறுக்கிடுகிறாய் என்று தானே பொருள்!

**''தன்னைப் படைத்ததுவும்**
**தானே எனும்தன்மை**
**பின்னைப் படைத்ததுவே**
**காட்டும்; பெரும்பெரும!**
**உன்னைப் படைத்தாய்நீ**
**என்றால், — உயிர்படைப்பான்**
**என்னைப் படைத்தாய் நீ**
**என்னும் அது ஏற்றாமோ?''**

பிரம்மாவுக்குப் படைக்கும் அதிகாரம் கொடுத்த இறைவனுக்கு அந்த அதிகாரத்தை ரத்துப் பண்ணவும் வாபஸ் பெற்றுக் கொள்ளவும் உரிமையுண்டு. ஆகவே, பிரம்மா செய்கிற வாதத்தில், கிண்டலும் பக்தியுமிருந்தாலும், நியாயம் இருப்பதாகத் தெரியவில்லை.

ஆனால், பிரம்மா சாட்டுகின்ற கீழ்க் கண்ட குற்றச்சாட்டில் உண்மை இருக்கத் தான் செய்கிறது. சொல்லுகிறான் பிரம்மா:

''பல்லாயிரம் கோடி அண்டங்கள், பனிக்கடலுள் தோன்றி மறைகின்ற நீர்க் குமிழிகளைப் போல, உன்னுடைய எல்லை யற்ற மேனியில் தோன்றியும் மறைந்து கொண்டுமிருக்கின்றன. எல்லா உருவமும் உன் உருவமாக இருக்கிறது. நீ இல்லாத உருவமே இல்லை. அப்படியிருக்கும்போது, உனக்கு இழுக்கு வரும்படியான அசட்டுக் காரியத்தை இச் சிறுபையன் பிரகலாதனுக் காகச் செய்துவிட்டாயே. நரசிம்மம் என்ற ஒரு உருவத்தை யோசனையில்லாமல் நீ படைத்துக்கொண்டு வந்துவிட்டபடியால், வரம்பற்ற உனக்கு வரம்பு என்று ஒன்று உண்டாகிவிட்டதே. உனது எல்லையற்ற பெருமைக்கு ஒரு இழுக்கல்லவா இது ?'' என்று பக்தி கலந்த ஏளனத்தோடு கேட் கிறான் பிரம்மா.

**''பல்ஆ யிரங்கோடி**
**அண்டம், — பனிக்கடலுள்**
**நில்லாத மொக்குள்எனத்**
**தோன்றுமால் நின்உழையே ;**
**எல்லா உருவமுமாய்**
**நின்றுய்க்கு—இவ்வுருவம்**
**வல் லே படைத்தால்**
**வரம்புண்மை ஆகாதோ ?''**

இந்தப் பாடலிலே ஏளனவேஷம் பூண்டு வெளிவருவது கம்பனுடைய பக்தியல்லவா! கடவுளின் எல்லையற்ற தன்மையிலுள்ள பெருமைக்கும், நரசிம்மம் என்ற உருவ எல் லைக்கு உட்பட்டுப்போன சிறுமைக்கும் இடை யிலேயிருக்கும் முரண்பாட்டைக் காட்டி விட்டு, இன்னொரு முரண்பாட்டையும் சுட்டிக் காட்டுகிறான் பிரம்மா, அதாவது, ஒவ்வொரு பொருளுக்கு உள்ளும், அப்பொரு ளின் புறத்தும் இறைவன் ஒருங்கே இருக் கும் அதிசய முரண்பாட்டை.

பிரம்மா பேசுகிறான் : ''உன்னுடைய பூரண தத்துவத்துக்குள்ளே சிருஷ்டி தத்துவ மாகிய என்னை நிருமித்தாய். எனக்கு என்று ஒரு தனி ஆற்றலும் இல்லை. நீ கொடுத்த அதிகாரத்தாலும் சக்தியாலும் உன்னுடைய பொருளுக்குள்ளேயே இருந்துகொண்டு உயிர் களை உண்டாக்கிக்கொண்டிருக்கிறேன். அப்படி உண்டாக்கப்பட்ட உயிர்களும் உனக் குள்ளேயே இயங்குகின்றன. நீயில்லையென் முல், நான் இல்லை ; நீ பொன்மயமாயிருக் கிறாய். நானே அந்தப் பொன்னுல் செய்யப் பட்டு, அந்தப் பொன்னுக்குள்ளேயே இயங்கு கின்ற ஒரு பொற்கொல்லன் போன்றவன் தானே.''

**''நின்னுளே என்னை**
**நிருமித்தாய், நீயல்லாது**
**என்னுளே எப்பொருளை**
**யாவரையே யானீன்றேன் ;**
**பின்இலேன் முன்இலேன்**
**எந்தை பெருமானே—**
**பொன்னுளே தோன்றியதோர்**
**பொற்கொல்லன் போல்கின்றேன்''**

இவ்வாறாக, கவிச்சக்கரவர்த்தி கம்பன், தன்னைப் படைத்த கடவுளோடு தத்துவ வாதப் பிரதிவாதம் நடத்துகிறான். இந்த உரையாடலில் நாம் காணும் வீச்சும், துணிச் சலும், பக்தி கலந்த ஹாஸ்யமும், உருக்க மும், கவித்துவ கம்பீரமும், நாடக ஆற்றலும் உலக இலக்கியத்தில் உன்னதமாக இருக்கும் எந்தப் பகுதியோடும் போட்டி போடும் தகுதியுடையவை. அத்வைதக் கொள்கை யின் விளைவுகள் துவைத உலகத்தில் வாழும் மக்களுடைய அறிவை கதிகலங்க வைக்கின் றன. ஆனால், கம்பன் தன்னுடைய மேதை யால் இந்தக் கலக்கத்துக்கே ஒரு நாடக உருவத்தைக் கொடுத்து, அத்வைதத்தை நிலைநாட்டும் சான்றாக இந்தக் கலக்கத்தையே பயன்படுத்துகிறான்.

கம்பனுடைய காவிய வெற்றிக்குக் காரணமாக இருப்பது, அவன் என்ன சொல் லுகிறான் என்பதுகூட அல்ல, அவன் அதை எப்படிச் சொல்லுகிறான் என்பதே. அவன் பயன்படுத்தும் சொற்கள் ஒவ்வொன்றும் ஒரு சிந்தனைக் குவியலின் முனையாக உரு வெடுத்து, நம் உள்ளத்தில் பாய்ந்து, உணர்ச்சியைப் பக்குவப்படுத்துகிறது. சுடர் விட்டு எரியும் அவனுடைய ஒளி பொருந்திய காட்சிகளை அவனுடைய சொற்கள் பதிவு செய்கின்றன. பின்னர், பதிவு செய்ததை மனிதக் குரலின் ஒலி அலைகளாக மாற்றி நம் இதயத்துக்குகந்தவாறு ஒலி பரப்புகின் றன.

வாழ்க்கையென்பது பொருளற்ற, ஆனால் கோபதாபங்கள் நிறைந்த ஒரு கதையாக— ஒரு அடிமுட்டாள் சொல்லும் கதையாக— கம்பனுக்குத் தோன்றவில்லை, ஷேக்ஸ்பிய ருடைய ஹாம்லெட்டுக்குத் தோன்றியது

போல. வாழ்க்கையென்பது பொருள் பொதிந்ததாய், ஒழுங்கை அடிப்படையாகக் கொண்டதாய், நியதிக்குக் கட்டுப்பட்ட தாய் உள்ள ஒரு உயர்ந்த தத்துவம் என்றே கம்பன் கருதுகிறுன். கம்பனுடைய கலை வெற்றிக்கு மூல ஊற்ருக இருப்பது எது வென்றுல், அவனுடைய எல்லையற்ற பரிவு தான், பேரண்டத்திலிருக்கும் பொருள்கள், உயிருள்ளனவானுலும் சரி, உயிரற்றனவானு லும் சரி, எல்லாவற்றிலும் அவனுக்கு இருக் கும் அந்தரங்கப் பரிவும் ஈடுபாடும். மண் ணுலக வாழ்க்கையென்பது எல்லையற்ற ஒரு இதிகாசத்திலே இடைச்செருகலாக வந்த ஒரு துக்கடாப் படலம் என்று கம்பன் உணருகிறுன். மண்ணுலக வாழ்வில் நடக் கும் நிகழ்ச்சிகளுக்கு மூலகாரணத்தை நம் பிறவிக்கு முன்னுள்ள வாழ்வில் போய்த் தேட வேண்டும் ; நாம் மண்ணுலக வாழ் வில் செய்யும் செயல்களின் விளைவுகள் நம் முடைய மரணத்துக்குப் பின்னுள்ள மறுமை வாழ்விலே தெரியக்கூடியவை என்பதை உணர்ந்தவன் கம்பன். ஆகவே தான், கம்பன் வாழ்க்கையை மேலும், மேலும் ஆழமாகத் தோண்டிக்கொண்டே செல்லுகிறுன். இறந்த காலம், எதிர்காலத்தைப் போலவே எல்லை யற்று நிற்பது, மனித ஆன்மா, காலத்தை எதிர்த்தும் கடந்தும் நிற்கும் நிரந்தர தத்து வம் என்பதையுணர்ந்தே கம்பன் வாழ்க்கை யை ஆழ்ந்து அகழ்கிறுன். இப்படிச் செய் வதன்மூலம், குழப்பம் நிறைந்தது போன்ற வாழ்க்கையிலுள்ள பலதிறப்பட்ட காட்சி களைக் கண்கொட்டாமல் கூர்ந்து கவனித்து, இசையாமல் நிற்பது போன்ற வாழ்க்கை யின் பல பாகங்களை இசைத்து, எல்லா வற்றையும் ஒன்ருகக் காணும் காட்சி கம்பனுக்குக் கிட்டியிருக்கிறது. இந்த ஞானக் காட்சியினுல் கம்பனுக்கு எல்லையற்ற நம்பிக் கையும் ஆர்வமும் பிறக்கின்றன. இதன் விளைவாக கம்பனுக்கு ஏற்படும் உறுதிப்பாடு அசைக்க முடியாதது. எமர்ஸன் (Emerson), ப்ளேட்டோ (Plato) வைப்பற்றிச் சொன் னது போல, சூரிய மண்டலத்திலிருந்து கொண்டு கம்பன் சத்தியத்தைப் பார்ப்ப தால், ஐயப்பாடு என்ற மேகத்தால் சற்றும் களங்கப்படாத காட்சியாக இருக்கிறது அவ னுடைய காட்சி.

இப்படியெல்லாம் சொல்லுவதால், கம்பன் ஏதோ தத்துவக் குப்பையைக் கிளறிக் கொண்டிருக்கும் அறிவியல் கவிஞன் என்ருே, அல்லது சமயச்சரக்கைச் சில்லறைக்கு விற்பனை செய்யும் தெரு வணிகன் என்ருே கருதிவிடக்கூடாது. மனித வாழ்விலே ஊன்றி நிற்கிறது கம்பனுடைய உணர்வின் ஆணிவேர். மனித பாத்திரங்களும் அவற் றின் சூழ்நிலையுமே அவனுடைய காவியத் தின் தலையாய பொருள். வாழ்க்கையும் இயற்கையுமே அவனுடைய காவியத்துக்கு ஊடும் பாவுமாக அமைந்தவை. ஈரமற்ற பாலைவனத்தை வருணிக்கிருன் கம்பன். அப்படி வருணிக்கும்போது, அப்பாவி யோகி களைப் பார்த்து அவன் கண்ணடிப்பது நமக்குத் தெரிகிறது. பாலைவனத்தில் ஈரப் பசையே இல்லையாம். அது எப்படி இருக் கிறது? இரண்டு விதமான ஆசாமிகளை ஒத் திருக்கிறதாம் அது. காமம், வெகுளி, மயக் கம் முதலியவற்றைத் தாண்டி முத்திக்கு வேகமாகப் போகின்ற யோகியர்கள் மனசு எப்படிப் பசையற்று இருக்குமோ, அப்படி யிருந்ததாம் பாலைவனம். இதோடு விட்டு விட்டுப் போயிருக்கலாம் யோகிகளை; ஆனுல் விடவில்லை. பொன் எங்கெங்கேயெல்லாம் இருக்கிறதோ, அங்கங்கெல்லாம் தம் நேசத்தை நீட்டும் விலைமாதரின் மனத்தைப் போலும் பசையற்றிருந்ததாம் பாலைவனம். இந்த இரட்டை உவமை கம்பனுக்கு யோகி யர்பா லிருந்த நகைச்சுவை கலந்த எரிச்சலைக் காட்டுவதோடு, வேருெரு கவிஞனுடைய கற்பனைக்கும் எட்டாத, முற்றும் வேறு பட்டது போல் தோன்றும் யோகியர் — வேசியர் உள்ளங்களுக்கிடையே இருக்கும் அந்தரங்க ஒற்றுமையை நாம் திடுக்கிடும் படியாக நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

கடலில் அணைபோடுவதை வருணிக்கும் போது, ஒரு குரங்கு மூன்று மலைகளை ஒரே காலத்தில் இட்டுவரும் அழகை மிக்க ஆர்வத் தோடும், வெள்ளித்திரையில் பார்க்கும் போது நாம் காணும் முழு விவரங்களோ டும் கம்பன் வருணிப்பான் ; காலிடை ஒரு மலையை உருட்டிக்கொண்டும், கைகளின் மேல் ஒரு மலையைத் தாங்கிக்கொண்டும், மழை முகில் சூழ்ந்து சுற்றிய வாலிடை ஒரு மலையை ஈர்த்துக்கொண்டும் வருகிறதாம் ஒரு குரங்கு.

நூறு போர்களை வருணிப்பான் கம்பன்; ஒவ்வொன்றை வருணிக்கும்போதும், யுத்த காலத்தில் அம்புகள் அங்குமிங்கும் பாயும்

ஒரு இடத்தில் நின்றுகொண்டு இப்போது நடந்துகொண்டிருக்கும் போரை வருணிப்பது போலிருக்கும். நூறு போரையும் நூறு தனி முறைகளில் நடத்திக் காட்டுவான். ஒவ்வொன்றும் மயிர்க்கூச்செறியும் பாணியில், நம் கவனத்தை முதலிலிருந்து கடைசி வரையில் ஈர்த்துக்கொண்டு செல்லும் முறையில் இருக்கும். போரின் முடிவு எப்படியாகுமோ என்ற பயம் ஏற்பட்டு நம்முடைய மூச்சோட்டமே சில சமயங்களில் நின்றுவிடும். மனித இதயத்தின் மூலை முடுக்குகளை நெருங்கியுணர்ந்தவனுகையால், மனிதச் செயல்கள் எந்த இதய ஊற்றிலிருந்து வெளிப்பட்டு வருகின்றன என்ற ரகசியத்தை மத்தாப்பூப் போட்டுக் காட்டுவான் கவிச்சக்கரவர்த்தி.

இதிகாசம் பெருநடை போட்டு நெடு வழிபோக வேண்டியிருப்பதால், அதற்கு இடையிடையே நடைத்தளர்ச்சி ஏற்படுவது இயல்பு. ஆனல், கம்பன் இதிகாசத்துக்கு நாடகப் பாங்கை ஏற்றி, நடைத்தளர்ச்சியை மாற்றுவான். கவிதையின் உணர்ச்சி வேகத்தால் இதிகாசத்துக்கும் நாடகத்துக்கும் உள்ளொளி ஊட்டுவான்.

கம்பன் எதைச் சொன்னுலும் சரி, அதை வாசகர்கள் பக்தியோடும் மதிப்போடும் மிகமுக்கியமான செய்தியைக் கேட்கின்ருேம் என்ற உணர்வோடும் கேட்கும்படி செய்துவிடுவான். வாசகர்களைக் கம்பராமாயணம் என்ற புனிதச் சுனையிலே மீண்டும் மீண்டும் நீராடச்செய்கிருன். அவ்வாறு நீராடிவிட்டு அவர்கள் வெளி வரும் ஒவ்வொரு தடவையும், முன்னிருந்த லட்சிய ஆர்வத்தைக்காட்டிலும் அதிக ஆர்வத்தோடும், அறத்தைப் பாதுகாப்பதிலே முன்னிருந்த ஆத்திரத்தைக்காட்டிலும் அதிக ஆத்திரத்தோடும், சத்தியம், சௌந்தரியம், உத்தமம் ஆகிய மூன்றிலும் முன்னிருந்த பக்தியைக்காட்டிலும் அதிக பக்தியோடும், அடிப்படைக் கேள்விகளைக் கேட்பதிலே முன்னிருந்த துணிச்சலைக்காட்டிலும் அதிக துணிச்சலோடும், அடிப்படைக் கேள்விகளுக்குப் பதில் சொல்லுவதிலே முன்னிருந்ததைக்காட்டிலும் அதிகத் தன்னம்பிக்கையோடும் வாசகர்கள் வெளிவருகிருர்கள்.

இவ்வளவையும் அவன் செய்து முடிப்பது கவிதையென்ற வரப்பிரசாதத்தால். அவனுடைய தாளம் அல்லது ரித்ம் விதம் விதமானது, உணர்ச்சிக்குரியது, நிறைவை நல்க வல்லது. உயிரெழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களையும் அவன் சதுரப்பாட்டோடும் மந்திரக்கோல் கொண்டும் தொட்ட மாத்திரத்தில், அவற்றின் ஒலிகள் மனித உணர்ச்சிகளின் நுண்ணுருவத்தையே எடுத்துக்காட்டிவிடுகின்றன. சொல்லொலிகளைத் தெளித்தும், தூவியும், பொழிந்தும், வாசகர்களுடைய அமைதியற்ற மனசை அமைதியுறச் செய்து, தியான நிலையில் நிறுத்தி, கவிஞன் சொல்லும் செய்தியை அப்படி அப்படியே ஏற்றுக்கொள்ளச் செய்கிருன் கம்பன். இவ்வாறு, கம்பன் விளையாடுகிற விளையாட்டு, சொல்லைப் பிரசவம் செய்வதற்கு முன்னுல் கவிஞன் பட்ட வேதனையைக் கொஞ்சமும் காட்டாமல், அனுயாசமாகவும் இயல்பாகவும் அமைந்திருக்கிறது. பிரபஞ்சப் படைப்பின் ரகசியங்களைப் பற்றிப் பேசும்போதும் சரி, வாழ்வின் அந்தரங்கக் காட்சிகளை ஒரு மின்னல் வெட்டின் ஒளியிலே காட்டும்போதும் சரி, கம்பனுடைய கவிநாதம் தியானநிலையிலே நம்மை நீடித்து நிறுத்திவிடுகிறது. கம்பன் கவிதையென்ற **அத்தர்** நம் இதயத்துக்குள் புகுந்து, மணம் வீசி, நம் அந்தராத்மாவுக்குக் களிப்பூட்டுகிறது. இவற்றையெல்லாம் கவனிக்கும்போது, கவிதா மண்டலத்தின் சக்கரவர்த்தியென்று கம்பனுக்கு முடிசூட்டுவது முற்றிலும் பொருந்தும்.

| Divisions. | Bala. | Ayod. | Aran. | Kish. | Sund. | Yudh. | Total |
|---|---|---|---|---|---|---|---|
| 2 Seers | ... | ... | 10 | ... | 4 | ... | 14 |
| 3 Seers | ... | ... | ... | ... | 28 | 91 | 119 |
| 4 Seers | 813 | 736 | 693 | 578 | 525 | 1636 | 4981 |
| 5 Seers | 88 | 243 | 200 | 156 | 266 | 744 | 1697 |
| 6 Seers | 301 | 189 | 272 | 280 | 400 | 1532 | 2974 |
| 7 Seers | 34 | 18 | 7 | 12 | 35 | 75 | 181 |
| 8 Seers | ... | ... | 6 | ... | ... | ... | 6 |
| **Total** | **1236** | **1186** | **1188** | **1026** | **1258** | **4078** | **9972** |

| No. | Div. | Bala. | Ayod. | Aran. | Kish | Sund. | Yudh. | Total |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | 2/A | ... | ... | 10 | ... | ... | ... | 10 |
| 2. | 2/B | ... | ... | ... | ... | 4 | ... | 4 |
| **2 Seers.** | | ... | ... | **10** | ... | **4** | ... | **14** |
| 3. | 3/A | ... | ... | ... | ... | 14 | ... | 14 |
| 4. | 3/B | ... | ... | ... | ... | 14 | ... | 14 |
| 5. | 3/C | ... | ... | ... | ... | ... | 80 | 80 |
| 6. | 3/D | ... | ... | ... | ... | ... | 11 | 11 |
| **3 Seers** | | ... | ... | ... | ... | **28** | **91** | **119** |
| 7. | 4/A | 182 | 173 | 129 | 121 | 141 | 452 | 1198 |
| 8. | 4/B | 24 | ... | 13 | ... | ... | 11 | 48 |
| 9. | 4/C | 326 | 401 | 286 | 230 | 235 | 699 | 2177 |
| 10. | 4/D | 51 | 15 | 79 | 50 | 70 | 27 | 292 |
| 11. | 4/E | 46 | 48 | ... | 103 | ... | 9 | 206 |
| 12. | 4/F | 37 | ... | ... | 47 | 6 | 11 | 101 |
| 13. | 4/G | 39 | 8 | 46 | ... | 16 | 11 | 120 |
| 14. | 4/H | 16 | ... | 77 | 7 | 8 | 104 | 212 |
| 15. | 4/I | ... | ... | ... | 2 | ... | ... | 2 |
| 16. | 4/J | 20 | 49 | ... | ... | ... | ... | 69 |
| 17. | 4/K | 26 | 8 | 14 | ... | ... | 165 | 213 |
| 18. | 4/L | ... | 33 | 20 | ... | 17 | 23 | 93 |
| 19. | 4/M | ... | ... | ... | 12 | ... | ... | 12 |
| 20. | 4/N | ... | ... | ... | ... | 13 | ... | 13 |
| 21. | 4/O | ... | ... | ... | .. | ... | 14 | 14 |
| 22. | 4/P | ... | ... | ... | ... | ... | 21 | 21 |
| 23. | 4/Q | ... | ... | ... | ... | ... | 26 | 26 |
| 24. | 4/R | ... | ... | ... | ... | ... | 4 | 4 |
| 25. | 4/S | ... | ... | ... | ... | ... | 12 | 12 |
| 26. | 4/T | ... | ... | ... | ... | ... | 2 | 2 |
| 27. | 4/U | ... | ... | ... | ... | ... | 26 | 26 |
| 28. | 4/V | ... | ... | ... | 6 | ... | ... | 6 |

| No. | Div. | Bala. | Ayod. | Aran. | Kish | Sund. | Yudh. | Total. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 29. | 4/W | 46 | ... | 29 | ... | ... | 19 | 94 |
| 30. | 4/X | ... | ... | ... | ... | 19 | ... | 19 |
| 31. | 4/Y | ... | 1 | ... | ... | ... | ... | 1 |
| **4 Seers.** | | **813** | **736** | **693** | **578** | **525** | **1636** | **4981** |
| 32. | 5/A | 22 | ... | ... | ... | ... | ... | 22 |
| 33. | 5/B | ... | 24 | ... | ... | ... | ... | 24 |
| 34. | 5/C | 30 | 132 | 88 | 115 | 200 | 658 | 1223 |
| 35. | 5/D | 24 | 39 | 9 | 2 | 26 | 54 | 154 |
| 36. | 5/E | 12 | ... | ... | ... | ... | ... | 12 |
| 37. | 5/F | ... | 37 | 30 | ... | 35 | 26 | 128 |
| 38. | 5/G | ... | 11 | ... | ... | ... | ... | 11 |
| 39. | 5/H | ... | ... | 47 | ... | ... | ... | 47 |
| 40. | 5/I | ... | ... | ... | 22 | ... | ... | 22 |
| 41. | 5/J | ... | ... | 26 | 17 | 5 | 6 | 54 |
| **5 Seers.** | | **88** | **243** | **200** | **156** | **266** | **744** | **1697** |
| 42. | 6/A | 259 | 107 | 237 | 259 | 326 | 1348 | 2536 |
| 43. | 6/B | 29 | 6 | 23 | 12 | 1 | 61 | 132 |
| 44. | 6/C | 13 | 18 | 12 | 9 | 28 | 30 | 110 |
| 45. | 6/D | ... | 58 | ... | ... | ... | ... | 58 |
| 46. | 6/E | ... | ... | ... | ... | 19 | 48 | 67 |
| 47. | 6/F | ... | ... | ... | ... | 15 | ... | 15 |
| 48. | 6/G | ... | ... | ... | ... | 11 | ... | 11 |
| 49. | 6/H | ... | ... | ... | ... | ... | 10 | 10 |
| 50. | 6/I | ... | ... | ... | ... | ... | 17 | 17 |
| 51. | 6/J | ... | ... | ... | ... | ... | 1 | 1 |
| 52. | 6/K | ... | ... | ... | ... | ... | 17 | 17 |
| **6 Seers** | | **301** | **189** | **272** | **280** | **400** | **1532** | **2974** |

| No. | Div. | Bala. | Ayod. | Aran. | Kish. | Sund. | Yudh. | Total |
|---|---|---|---|---|---|---|---|---|
| 53. | 7/A | 13 | ... | ... | ... | 21 | ... | 34 |
| 54. | 7/B | 21 | ... | ... | 12 | ... | 24 | 57 |
| 55. | 7/C | ... | 18 | ... | ... | ... | ... | 18 |
| 56. | 7/D | ... | ... | 7 | ... | ... | ... | 7 |
| 57. | 7/E | ... | ... | ... | ... | 14 | ... | 14 |
| 58. | 7/F | ... | ... | ... | ... | ... | 27 | 27 |
| 59. | 7/G | ... | ... | ... | ... | ... | 24 | 24 |
| **7 Seers.** | | **34** | **18** | **7** | **12** | **35** | **75** | **181** |
| 60. | 8/A | ... | ... | 6 | ... | ... | ... | 6 |
| **8 Seers.** | | ... | ... | **6** | ... | ... | ... | **6** |

## சீர் 2-a பாடல்கள் 10

இற்றெலாம் இயம்பினுன்
நிற்றலோடும் நீஇவ்வா(று)
உற்றவா றுணர்த்தெனு
வெற்றியான் விளம்பினுன்.

**நேர் 7 நிரை 8**

குறளடி நான்குடை வஞ்சித் தாழிசை
(சிந்தடியாகவும் அலகிடலாம்)
ஏழு எழுத்து-எட்டெழுத்து அளவியற் சந்தம்.

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 3 | **ஆரணிய காண்டம்** | | | |
| | **விராதன் வதை** | 61 | 70 | 10 |
| | **மொத்தம்** | | | **10** |

## சீர் 2-b பாடல்கள் 4

உண்ட நெருப்பைக்
கண்டனர் பற்றிக்
கொண்டணே கென்ருன்
அண்டரை வென்ருன்.

**நேர் 5 நிரை 6**

குறளடி நான்கு கொண்ட வஞ்சித்துறை
ஐந்து-ஆறு எழுத்து அளவியற் சந்தம்

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 5 | **சுந்தர காண்டம்** | | | |
| | இலங்கை எரி | 41 | 44 | 4 |
| | **மொத்தம்** | | | **4** |

a

## சீர் 3-a பாடல்கள் 14

வீவாய் நீஇவண் மெய்அஃதே
ஒய்வான் இன்னுயிர் உய்வானும்
போய்வான் அந்நகர் புக்கன்ருே
வேய்வான் மௌவியும் மெய்யன்ருே ?

**நேர் 8 நிரை 9**

சிந்தடி நான்கு கொண்ட வஞ்சி விருத்தம்
மா, விளம், காய்
எட்டு-ஒன்பது எழுத்து அளவியற் சந்தம்

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 5 | **சுந்தர காண்டம்** | | | |
| | சூடாமணிப் | 40 | 53 | 14 |
| | **மொத்தம்** | | | **14** |

## சீர் 3-b பாடல்கள் 14

நீர்கெழு வேலே நிமிர்ந்தார்
தார்கெழு தானே சமைந்தார்
போர்கெழு மாலே புனேந்தார்
ஓர்எழு வீரர் உயர்ந்தார்

**நேர் 8**

ஈரசைச்சீர் மூன்று, வெண்டளே தட்டாமல்
சிந்தடியாய் வந்த வஞ்சி விருத்தம்.
எட்டெழுத்து அளவியற் சந்தம்

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 5 | **சுந்தர காண்டம்** | | | |
| | இலங்கைஎரி | 45 | 58 | 14 |
| | **மொத்தம்** | | | **14** |

## சீர் 3-c பாடல்கள் 80

நதிகாய்நெடு மானமும் நாணுமுரு
மதிகாய்குடை மன்னனே வைதுரையா
விதிகாயினும் வீரம்வெ லற்கரியான்
அதிகாயனெ னும்பெய ரானறைவான்

**நேர் 11 நிரை 12**

கனி விளம் கா
சிந்தடி நான்கு கொண்ட வஞ்சி விருத்தம்
(அளவடி நான்குடைக் கலி விருத்தமாகவும் அலகிடலாம்)
பதினொன்று-பன்னிரண்டெழுத்து அளவியற் சந்தம்.

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 5 | **யுத்த காண்டம்** | | | |
| | அதிகாயன் | 7 | 86 | 80 |
| | | | **மொத்தம்** | **80** |

## சீர் 3-d பாடல்கள் 11

ஆழி யாயிவன் ஆகுவான்
ஏழை வாழ்வுடை எம்முனோன்
தாழ்வி லாஒரு தம்பியோன்
ஊழி நாளுமு றங்குவான்.

**நேர் 8 நிரை 9**

மா விளம் விளம்
சிந்தடி நான்குடை வஞ்சி விருத்தம்
எட்டு-ஒன்பது எழுத்து அளவியற் சந்தம்

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 6 | **யுத்த காண்டம்** | | | |
| | கும்பகருண | 111 | 121 | 11 |
| | | | **மொத்தம்** | **11** |



## சீர் 4-a பாடல்கள் 1198

உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசரண் நாங்களே.

**நேர் 11 நிரை 12**

மா, விளம், விளம், விளம்
அளவடி நான்குடைக் கட்டளைக் கலிப்பா
2 அல்லது 3-ம் சீர் மா ஆயின் அடுத்த சீர் நிரை வரும்.
பதினொன்று-பன்னிரண்டு எழுத்து அளவியற் சந்தம்

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 1 | **பால காண்டம்** | | | |
| | பாயிரம் | 1 | 11 | 11 |
| | ஆற்றுப் | 1 | 12 | 12 |
| | நாட்டுப் | 23 | 41 | 19 |
| | நகரப் | 26 | 68 | 43 |
| | தாடகைவ | 36 | 48 | 13 |
| | மிதிலைக் | 77 | 82 | 6 |
| | கைக்கிளை | 1 | 12 | 12 |
| | வரைக்கா | 25 | 35 | 11 |
| | பூக்கொய் | 35 | 39 | 5 |
| | நீர்விளை | 18 | 33 | 16 |
| | உலாவியற் | 20 | 53 | 34 |
| | | | **மொத்தம்** | **182** |
| 2 | **அயோத்தியா காண்டம்** | | | |
| | மந்தரைசூ | 1 | 9 | 9 |
| | மந்தரைசூ | 13 | 31 | 19 |
| | நகர்நீங்கு | 3 | 29 | 27 |
| | நகர்நீங்கு | 215 | 232 | 18 |
| | கங்கைப் | 9 | 27 | 19 |
| | குகப் | 1 | 10 | 10 |

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| | சித்திரகூடப் | 49 | 56 | 8 |
| | பள்ளிபடை | 1 | 41 | 41 |
| | கங்கைகாண் | 70 | 72 | 3 |
| | திருவடிசூட்டு | 1 | 19 | 19 |
| | | மொத்தம் | | **173** |
| 3 | **ஆரணிய காண்டம்** | | | |
| | அகத்தியப் | 17 | 35 | 19 |
| | சடாயுகாண் | 28 | 42 | 15 |
| | சூர்ப்பணகை | 65 | 81 | 17 |
| | திரிசிராவதை | 1 | 29 | 29 |
| | கரன்வதைப் | 14 | 31 | 18 |
| | மாரீசன்வதைப் | 74 | 81 | 8 |
| | இரா-சூழ்ச்சிப் | 1 | 4 | 4 |
| | அயோமுகிப் | 9 | 27 | 19 |
| | | மொத்தம் | | **129** |
| | **கிட்கிந்தா காண்டம்** | | | |
| | பம்பைவாவி | 32 | 36 | 5 |
| | வாலிவதை | 90 | 121 | 32 |
| | கிட்கிந்தை | 1 | 45 | 45 |
| | நாடவிட்ட | 1 | 20 | 20 |
| | ஆறுசெல் | 35 | 53 | 19 |
| | | மொத்தம் | | **121** |
| | **சுந்தர காண்டம்** | | | |
| | ஊர்தேடு | 147 | 155 | 9 |
| | ஷை | 165 | 177 | 13 |
| | காட்சிப் | 19 | 29 | 11 |
| | ஷை | 95 | 110 | 16 |
| | சூடாமணிப் | 11 | 37 | 27 |
| | ஷை | 23 | 39 | 17 |

சீர் 4-உ (தொடர்ச்சி)

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| | பிணிவீட்டு | 30 | 36 | 7 |
| | ஷை | 85 | 106 | 22 |
| | இலங்கைஎரியூ | 1 | 19 | 19 |
| | | மொத்தம் | | **141** |
| 6 | **யுத்த காண்டம்** | | | |
| | சேதுபந்தனப் | 26 | 71 | 46 |
| | ஒற்றுக்கேள் | 39 | 65 | 27 |
| | அங்கதன் | 39 | 43 | 5 |
| | முதற்போர் | 1 | 100 | 100 |
| | கும்பகர்ண | 54 | 73 | 20 |
| | நாகபாசப் | 122 | 162 | 41 |
| | இராவ-சோக | 1 | 34 | 34 |
| | மூலபலவதை | 119 | 136 | 18 |
| | வானரர்களம் | 26 | 34 | 9 |
| | இராவ-களம் | 1 | 8 | 8 |
| | இராவ-வதை | 19 | 45 | 27 |
| | ஷை | 160 | 196 | 37 |
| | மண்டோ-புல | 29 | 34 | 6 |
| | வீடண-முடி | 1 | 13 | 13 |
| | பிராட்டிதிரு | 1 | 25 | 25 |
| | மீட்சிப் | 45 | 63 | 19 |
| | ஷை | 70 | 86 | 17 |
| | | மொத்தம் | | **452** |

## சீர் 4-b பாடல்கள் 48

இயல்புடைப் பெயர்வன மயின்மணி இழையின்
வெயில்புடைப் பெயர்வன மிளிர்மூலே குழலின்
புயல்புடைப் பெயர்வன பொழிலவர் விழியின்
கயல்புடைப் பெயர்வன கடிகமழ் கழநி.

**நேர் 14 நிரை 15**

விளம் கருவிளம் கருவிளம் மா
= தன தன - தன தன - தன தன - தன னு =
அளவடி நான்குடை அளவியற் சந்தக் கலி விருத்தம்

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 1 | **பால காண்டம்** | | | |
| | நாட்டுப் | 42 | 51 | 10 |
| | திருவவதா | 118 | 131 | 14 |
| | **மொத்தம்** | | | **24** |
| 3 | **ஆரணிய காண்டம்** | | | |
| | சரவங் | 32 | 44 | 13 |
| | **மொத்தம்** | | | **13** |
| 6 | **யுத்த காண்டம்** | | | |
| | இராவ-வதை | 84 | 94 | 11 |
| | **மொத்தம்** | | | **11** |

## சீர் 4-c பாடல்கள் 2177

வயிரவாள் பூண்அணி மடங்கல் மொய்ம்பினுன்
உயிரெலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்
செயிரிலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிர்எலாம் உறைவதோர் உடம்பும் ஆயினுன்.

விளம், விளம், மா, கூவிளம்
அளவடி நான்குடைக் கலி விருத்தம்



| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 1 | **பால காண்டம்** | | | |
| | அரசியல் | 6 | 12 | 7 |
| | திருஅவதார | 1 | 21 | 21 |
| | ஷை | 37 | 53 | 17 |
| | ஷை | 64 | 112 | 49 |
| | ஷை | 132 | — | 1 |
| | கையடை | 1 | 4 | 4 |
| | தடாகைவ | 11 | 24 | 14 |
| | வேள்விப் | 23 | 44 | 22 |
| | மதிலேக் | 33 | 63 | 31 |
| | கார்முகப் | 1 | 15 | 15 |
| | ஷை | 56 | 66 | 11 |
| | எழுச்சிப் | 1 | 26 | 26 |
| | உண்டாட் | 1 | 9 | 9 |
| | ஷை | 21 | 55 | 35 |
| | ஷை | 61 | 67 | 7 |
| | கடிமணப் | 39 | 76 | 38 |
| | ஷை | 80 | 84 | 5 |
| | பரசுராமப் | 37 | 50 | 14 |
| | **மொத்தம்** | | | **326** |
| 2 | **அயோத்தியா காண்டம்** | | | |
| | மந்திரப் | 1 | 5 | 5 |
| | ஷை | 9 | 30 | 22 |
| | ஷை | 76 | 85 | 10 |
| | மந்தரைசூ | 10 | 12 | 3 |
| | ஷை | 32 | 69 | 38 |
| | நகர்நீங்கு | 148 | 208 | 61 |
| | சுமந்திரன் | 1 | 9 | 9 |
| | ஷை | 20 | 47 | 28 |
| | சித்திரகூடப் | 38 | 49 | 11 |
| | பள்ளிபடைப் | 42 | 73 | 32 |

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| | பள்ளிபடைப் | 86 | 113 | 28 |
| | ஆறுசெல் | 1 | 58 | 58 |
| | கங்கைகாண் | 1 | 13 | 13 |
| | ஷை | 62 | 63 | 2 |
| | திருவடிசூட்டு | 20 | 57 | 38 |
| | ஷை | 68 | 87 | 20 |
| | ஷை | 117 | 139 | 23 |
| | | | **மொத்தம்** | **401** |
| 3 | **ஆரணிய காண்டம்** | | | |
| | அகத்தியப் | 1 | 16 | 16 |
| | சடாயுகாண் | 1 | 20 | 20 |
| | சூர்ப்பணகை | 1 | 23 | 23 |
| | திரிசிராவதை | 30 | 54 | 25 |
| | ஷை | 102 | 110 | 9 |
| | ஷை | 112 | 131 | 20 |
| | இரா-அணங்கு | 6 | 40 | 35 |
| | ஷை | 119 | 131 | 13 |
| | இரா-சூழ்ச்சி | 5 | 50 | 46 |
| | சடாயு உயிர் | 3 | 6 | 4 |
| | ஷை | 45 | 63 | 19 |
| | ஷை | 104 | 111 | 8 |
| | அயோமுகிப் | 78 | 101 | 24 |
| | கவந்தன் | 2 | 25 | 24 |
| | | | **மொத்தம்** | **286** |
| 4 | **கிட்கிந்தா காண்டம்** | | | |
| | கடவுள்வாழ் | — | — | 1 |
| | பம்பைவாவி | 1 | 15 | 15 |
| | மராமரப் | 15 | — | 1 |
| | கலன்காண் | 1 | 34 | 34 |

சீர் 4-c (தொடர்ச்சி)

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| | வாலிவதை | 13 | 36 | 24 |
| | கார்காலப் | 1 | 24 | 24 |
| | ஷை | 84 | 120 | 37 |
| | கிட்கிந்தை | 104 | 137 | 34 |
| | தானைகாண் | 1 | — | 1 |
| | பிலம்புக்குநீங் | 7 | 35 | 29 |
| | சம்பாதிப் | 1 | 13 | 13 |
| | ஷை | 17 | 33 | 17 |
| | | | **மொத்தம்** | **230** |
| 5 | **சுந்தர காண்டம்** | | | |
| | ஊர்தேடு | 41 | 59 | 19 |
| | ஷை | 120 | 127 | 8 |
| | காட்சிப் | 30 | 73 | 44 |
| | ஷை | 119 | 125 | 7 |
| | உருக்காட்டு | 11 | 25 | 15 |
| | ஷை | 39 | 51 | 13 |
| | ஷை | 95 | 108 | 14 |
| | சூடாமணிப் | 54 | 74 | 21 |
| | கிங்கரர்வதை | 58 | 61 | 4 |
| | பஞ்சசேனை | 19 | 45 | 27 |
| | அக்ககுமாரன் | 48 | 49 | 2 |
| | பாசப் | 1 | 3 | 3 |
| | ஷை | 23 | — | 1 |
| | பிணிவீட்டு | 1 | 29 | 29 |
| | ஷை | 56 | 70 | 15 |
| | ஷை | 123 | — | 1 |
| | திருவடிதொ | 14 | 25 | 12 |
| | | | **மொத்தம்** | **235** |
| 6 | **யுத்த காண்டம்** | | | |
| | இராவ-மந்திர | 1 | 46 | 46 |
| | ஷை | 66 | 81 | 16 |

## சீர் 4-c (தொடர்ச்சி)

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| | இரணி-வதை | 57 | 78 | 22 |
| | வீடண-அடைக் | 1 | 98 | 98 |
| | ஒன்னுர்வலி | 1 | 32 | 32 |
| | கடல்சீறி | 32 | 57 | 26 |
| | சேதுபந்தன | 1 | 15 | 15 |
| | முதற்போர் | 101 | 126 | 26 |
| | கும்பகருண | 74 | 108 | 35 |
| | ஷை | 250 | 311 | 62 |
| | மாயாசனக | 93 | 95 | 3 |
| | அதிகாயன்வ | 1 | 6 | 6 |
| | ஷை | 87 | 127 | 41 |
| | நாகபாசப் | 27 | 48 | 22 |
| | படைத்தலைவர் | 31 | 48 | 18 |
| | பிரமாத்திரப் | 37 | 53 | 17 |
| | மருத்துமலை | 63 | 107 | 45 |
| | நிகும்பலையா | 44 | 69 | 26 |
| | மூலபலவதை | 168 | 185 | 18 |
| | இராவ-வதை | 58 | 83 | 26 |
| | ஷை | 143 | 159 | 17 |
| | மண்டோ-புலம் | 12 | 21 | 10 |
| | பிராட்டிதிருவடி | 35 | 39 | 5 |
| | ஷை | 43 | 84 | 42 |
| | மீட்சிப் | 87 | 111 | 25 |
| | | | **மொத்தம்** | **699** |

## சீர் 4-d பாடல்கள் 292

வந்துமுனி எய்துதலும் மார்பில்அணி ஆரம்
அந்தரத லத்திரவி அஞ்சஒளி விஞ்ச
சுந்தமல ரில்கடவுள் தன்வரவு காணும்
இந்திரனெ னக்கடிதெ ழுந்தடிப ணிந்தான்.

**நேர் 14 நிரை 15**

விளங்காய் விளங்காய் விளங்காய் தேமா
= தன்னதன தன்னதன தன்னதன தான =
அளவடி நான்குடை அளவியற் சந்தக் கலி விருத்தம்

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 1 | **பால காண்டம்** | | | |
| | கையடைப் | 5 | 7 | 3 |
| | தாடகைவதை | 25 | 35 | 11 |
| | சந்திரசயி | 13 | 27 | 15 |
| | கோலங்காண் | 23 | 43 | 20 |
| | கடிமணப் | 1 | 2 | 2 |
| | | | **மொத்தம்** | **51** |
| 2 | **அயோத்தியா காண்டம்** | | | |
| | கைகேசிசூழ் | 97 | 103 | 7 |
| | சுமந்திரன் | 10 | 17 | 8 |
| | | | **மொத்தம்** | **15** |
| 3 | **ஆரணிய காண்டம்** | | | |
| | அகத்தியப் | 36 | 59 | 24 |
| | சூர்ப்பணகை | 24 | 31 | 8 |
| | கரன்வதை | 1 | 13 | 13 |
| | இரா. அணல் | 41 | 62 | 22 |
| | மாரீசன் வதை | 19 | 30 | 12 |
| | | | **மொத்தம்** | **79** |

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 4 | **கிட்கிந்தா காண்டம்** | | | |
| | கார்காலப் | 70 | 83 | 14 |
| | பிலம்புக்குநீ | 36 | 71 | 36 |
| | | | **மொத்தம்** | **50** |
| 5 | **சுந்தர காண்டம்** | | | |
| | கடல்தாவு | 76 | 76 | 1 |
| | ஊர்தேடு | 1 | 3 | 3 |
| | ஷை | 60 | 72 | 13 |
| | ஷை | 156 | 164 | 9 |
| | உருக்காட்டு | 60 | 70 | 11 |
| | சூடாமணிப் | 1 | 10 | 10 |
| | ஷை | 38 | 39 | 2 |
| | பொழிலிறுத்த | 1 | 8 | 8 |
| | ஷை | 10 | 22 | 13 |
| | | | **மொத்தம்** | **70** |
| 6 | **யுத்த காண்டம்** | | | |
| | இராவ-மந்திர | 47 | 65 | 19 |
| | ஒற்றுக்கேள்வி | 1 | 13 | 13 |
| | மகுடபங்கப் | 7 | 25 | 19 |
| | இராம. தேரேறு | 1 | 27 | 27 |
| | | | **மொத்தம்** | **27** |

## சீர் 4-e பாடல்கள் 206

கறுத்த மாமுனி கருத்தை உன்னிநீ
பொறுத்தி என்றவற் புகன்று நின்மகற்(கு)
உறுத்தல் ஆகலா உறுதி எய்துநாள்
மறுத்தி யோஎனு வசிட்டன் கூறுவான்.

**மா, விளம், மா, விளம்**
**அளவடி நான்குடைக் கலிவிருத்தம்**

| காண்டம் | படலம் | முதல் | வரை | பாடல் தொகை |
|---|---|---|---|---|
| 1 | **பால காண்டம்** | | | |
| | நாட்டுப் | 52 | 61 | 10 |
| | கையடைப் | 15 | 25 | 11 |
| | எழுச்சிப் | 26 | 50 | 25 |
| | | | **மொத்தம்** | **46** |
| 2 | **அயோத்தியா காண்டம்** | | | |
| | பள்ளிபடைப் | 114 | 134 | 21 |
| | திருவடிசூட்டு | 88 | 114 | 27 |
| | | | **மொத்தம்** | **48** |
| 4 | **கிட்கிந்தா காண்டம்** | | | |
| | நட்புக்கோட் | 32 | 69 | 38 |
| | தாரைபுலம்பு | 4 | 20 | 17 |
| | அரசியற் | 1 | 6 | 6 |
| | ஆறுசெல் | 3 | 25 | 23 |
| | சம்பாதி | 34 | 52 | 19 |
| | | | **மொத்தம்** | **103** |
| 6 | **யுத்த காண்டம்** | | | |
| | மருத்துமலை | 108 | 116 | 9 |
| | | | **மொத்தம்** | **9** |

